# டாக்டர் தர்மபூஷணம்



ஸ்ரீ சுவாமி சிவானந்தா



இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

# டாக்டர் தர்மபூஷணம்

இயற்றியவர் :

ஸ்ரீ சுவாமி சிரத்தானந்தா

சிவானந்தா நூற்ருண்டு விழா வெளியீடு







தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா

1985

[ ரூ. 4—00 விலை ]

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப்பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனுல் தமிழ் நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புக்கள் இன்று இருக்கின்றன.

இவ்வாண்டுக்கான ஞானயக்ஞத் 'தொடரில் 'டாக்டர் தர்மபூஷணம்' என்ற நூல் குருதேவருடன் மலேசியாவில் வசித்தவரும், அவருக்குத் தொண்டாற்றியவருமான ஸ்ரீ சுவாமி சிரத்தானந்தா அவர்கள் குருதேவ் சிவானந்தரின் பூர்வாஸ்ரம வாழ்க்கையை மிக அற்புதமாக விளக்கி மிக எளிய தமிழ் நடையில் எழுதியுள்ளார்கள்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் சேலம் லிட்டரரி பிரஸ்ஸார் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீக போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

Swami Chidananda

ॐ

# பொருளடக்கம்


| தலைப்புகள் | | பக்கம் |
|---|---|---|
| **அத்தியாயம்–1** | | |
| 1. முதல் நாள் அனுபவம் | ... | 1 |
| **அத்தியாயம்-2** | | |
| 2. டாக்டரின் பரந்த நோக்கம் | ... | 4 |
| **அத்தியாயம்-3** | | |
| 3. மனமாற்றம் | ... | 7 |
| **அத்தியாயம்-4** | | |
| 4. டாக்டரின் உதார குணம் | ... | 12 |
| **அத்தியாயம்–5** | | |
| 5. டாக்டரின் பக்தி | ... | 18 |
| **அத்தியாயம்–6** | | |
| 6. பிரிவு | ... | 25 |
| **அத்தியாயம்–7** | | |
| 7. கதிர்காமத்தின் மகிமை | ... | 34 |
| **அத்தியாயம்–8** | | |
| 8. பிரிவுக்குப்பின் சந்திப்பு | ... | 42 |
| **அத்தியாயம்–9** | | |
| 9. பற்றுகள் நீங்கி உபதேசம் பெறுதல் | ... | 51 |
| 10. சிவாமிருத மொழிகள் 1—19, | ... | 57 |

# பதிப்பாளர் முன்னுரை

ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிவானந்தரின் திவ்விய சரித்திரம் இதுவரை அநேக பிரபல எழுத்தாளர்களால் இயற்றப்பட்டிருக்கிறது. எனினும் இவையனைத்தும் ஸ்ரீ சுவாமிகளின் சந்நியாஸாச்சிரமத்தின் பின்னர் நடந்த அற்புத லீலைகளையே பெரும்பாலும் வர்ணிக்கின்றன. பூர்வாச்சிரம வாழ்க்கை வரலாற்றை அறியும் பாக்கியம் நமக்கு இதுவரை கிடைக்கவில்லை. அதை அறிந்தவர் ஒரு சிலரே. மேலும் ஸ்ரீ சுவாமிகளோ அதைப்பற்றி பேசுவது துர்லபம்.

ஸ்ரீ சுவாமிகளுடன் மலேயாவில் வசித்தவரும் அவருக்குத் தொண்டாற்றியவருமான ஸ்ரீ நரசிம்ம அய்யர், சுவாமிகளைத் தேடி பின்னர் ரிஷிகேசத்தில் கண்டுபிடித்து, அவர்களிடமிருந்து சந்நியாசமேற்று ஆச்சிரமத்தில் தங்கி 1952ல் பரமபதமடைந்தார். டாக்டர் குப்புசுவாமி [ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் பூர்வாச்சிரமப் பெயர்] யின் ஆச்சர்யகரமான குணாதிசயங்களை விவரிக்குங்கால் ஸ்ரீ சுவாமி சிரத்தானந்தர் [ஸ்ரீ நரசிம்ம அய்யரின் சந்நியாசப் பெயர்] கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் சொரியும். கேட்பவர்கள் புளகாங்கிதமடைவர்.

அநேகர் வேண்டுகோளுக்கிணங்கி ஸ்ரீ சுவாமி சிரத்தானந்தர் தந்த சிவ ஆனந்த வெள்ளமிது. இது உங்கள் இதயத்தை சிவ ஆனந்த மயமாக்கி, டாக்டர் தர்மபூஷணத்தின் கொள்கைகளைப் பின்பற்ற ஊக்கமூட்டி, நீங்களும் யோகிகளாகவும், ஞானிகளாகவும் இம் மாநிலத்தில் விளங்க வைக்க ஆண்டவன் அருள்வாராக!

பதிப்பாளர்



# ஸ்ரீ சுவாமி சிரத்தானந்தர்

ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிவானந்தர் அவர்கள் தம்முடைய பூர்வாசிரமத்தில் மலேயாவில் வைத்தியத் தொழில் நடத்தி வந்த நாளிலே அவர்களுடன் கூட இருந்து பழகி வந்தவர், இந்நூலாசிரியர் ஸ்ரீ சுவாமி சிரத்தானந்தர். ஆகையால்தான் புதிதான விஷயங்களை எழுத முடிந்தது.

அன்றும் ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிவானந்தர் அவர்கள் சுயநலம் பாராட்டாது, பற்றற்று, பரம காருண்யத்துடன், விரிந்த அன்புடன், களைப்பின்றி, பணிவிடை செய்யும் இயல்புடையவராய், உயர்வான நெறியில் ஒழுக முயல்வோருக்கு ஒரு வழிகாட்டியாகவே விளங்கினார். பல வருஷங்களுக்கு முன் அத்தகைய மகானுடனிருந்து அவருக்குத் தொண்டுபுரிந்து, இணைபிரியாது வாழ்ந்துவரும் பாக்கியம் இந் நூலாசிரியர் பெற்றிருந்தார். அங்ஙனம் பல நாள் ஆர்வத்துடன் பணிவிடை செய்த பின்பு, ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிவானந்தர் அவர்கள் நட்புக்கு முற்றிலும்

பாத்திரமாகி, இவர் இலங்கையிலுள்ள மிகப் புனித மான கதிர்காம க்ஷேத்திரத்தைப் பார்க்கவும் தரிசிக்கவும் ஆவலுற்று அக்காரணத்தால் சுவாமி களை விட்டுப் பிரிந்தார்.

இவர் இலங்கையில் தங்கியிருந்த காலத்தில் ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிவானந்தர் அவர்கள் மலேயாவை விட்டு விலகி உலக வியவகாரங்களை முற்றிலும் ஒழித்துத் துறவியாகித் கடுந்தவம் புரிவதற்காக உறைபனி விலகாத இமயமலையடைந்து அங்கே எவராலும் அறிதற்கியலாத ஏகாந்தப் பிரதேசஞ் சென்று யோக நிஷ்டையிலமர்ந்தார். இவருடைய இருப்பிடம், வாழ்க்கை முதலியவற்றைத் தெரிந்து கொள்ள வழியில்லாத இந்நூலாசிரியர், கதிர்காம முருகன் கருணையாலும், தாம் முன்னே சுவாமி களிடம் வியப்புற்ற குணாதியங்களின் பயனாலும் தம்முடைய இல்லற வாழ்க்கையில் சற்றே வெறுப்புத் தோன்றி துறவியாகும் காலத்தை எதிர் நோக்கியே இருந்தார்.

காலம் செல்லச் செல்ல இம் மனப்பான்மை உறுதிபெற்று, ஓங்கி வளர்ந்துகொண்டே வந்து, இவரை 1941ம் வருடத்தில் கங்கா தீரத்திற்கு வரச் செய்தது. அப்பொழுது டாக்டர் குப்புசுவாமி ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிவானந்தர் என்ற பெயருடன் ஆனந்தகுடீரத்தில் இருக்கிறார் என்று தெரியலானார். உடனே இந்நூலாசிரியர் ஆனந்தகுடீர் வந்து சுவாமி களைக் கண்டு வணங்கி, அவர் பாதத்தில் விழுந்து, சந்நியாசம் வேண்டினார். அதற்கு சுவாமிகள் இணங்காததால், மீண்டும் இவர் தம் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார். எனினும், இவருடைய உலகப் பற்றுகள் ஒவ்வொன்றாக நைந்து நழுவ ஆரம்பித் தன. துறவு நினைப்பும் வலிமை பெற்று நாளுக்கு நாள் அதிகரித்து வந்தது. 1943-ம் வருடம்

ஆனந்தகுமர் வந்து மற்ருெருதரம் ஸ்ரீ சுவாமிகளை இறைஞ்சிக் கேட்டார். அப்பொழுதும் மறுத்து அனுப்பிவிட்டார். சில நாட்கள் சென்றது.

இவருக்குத் துறவு காலம் நெருங்கியதும் கடைசி முறையாக, 1947-ம் வருடம் வந்து குருநாதரைப் பணிந்து வேண்டினர். அப்பொழுது சுவாமிகள் இவருக்கு சந்நியாசம் கொடுத்தார். அன்று முதல் இவர் சுவாமிகளுக்குத் தொண்டாற்றி அன்னரின் பாதகமலங்களிலேயே 1952 ஆகஸ்ட் 3-ம் தேதி மஹா சமாதியடைந்தார்.

''டாக்டர் தர்மபூஷணம்'' என்ற பெயரைத் தாங்கிய இந்நூல் ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிவானந்தர் அவர்களின் துறவற மனப்பான்மையையும், டாக்டராக இருந்த காலத்தில் அவருக்கிருந்த பரந்த நோக்கத்தையும், கருணையையும் எடுத்துக் காட்டு கிறது. அன்றியும் இது டாக்டர் தர்மபூஷணம் என்கிற குப்புசாமி எப்படி ஒப்பற்ற உத்தம புருஷ ராக விளங்கினர் என்பதையும், அவரே இப்பொழுது எவ்வாறு இணையற்ற உலக குருவாக விளங்குகிருர் என்பதையும் நன்ருகவும், விரிவாகவும், விளக்க மாகவும் தெரிவிக்கின்றது.

இதில் உயர்வான, கம்பீரமான கருத்துக்கள் நிறைந்துள்ளதுமன்றி, இதனைப் படிப்போரை அறிவுடையவர்களாக்கி, அவர்களை உன்னத நோக் குடையவர்களாகச் செய்கிறது. ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிவானந்தர் அவர்களின் அழகமைந்த பூர்வாசிரம மலேயா வாழ்க்கையை இந்நூல் மூலமாக நமக்குத் தந்துதவிய ஸ்ரீ சுவாமி சிரத்தானந்தருக்கு நமது நன்றி உரித்தாகுக. இந்நூல் அனைவருக்கும் பயனளிக்கும் என்பது எங்களது பூரண நம்பிக்கை.

பதிப்பாளர்

# "டாக்டர் தர்மபூஷணம்"

## புத்தகம் அச்சிட நன்கொடை அளித்த அன்பர்கள்

---

| நெ. | பெயரும் விலாசமும் | | ரூபாய் |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீ சுவாமி நிர்மலானந்தா<br>சிவானந்தா ஆஸ்ரமம்,<br>ரிஷிகேஷ், இமயமலை. | .... | 1000 |
| 2. | 'குருபக்தி ரத்ன'<br>திரு. M. S. A. ஜெயராம்,<br>தலைவர், தெய்வீக வாழ்க்கைச் சங்கம்,<br>& Prop. ஜெயராம் டெக்ஸ்டைல்ஸ்,<br>இராசிபுரம். | .... | 101 |
| 3. | செல்வி J. விஜயா, B. E ,<br>D/o திரு. M. S. A. ஜெயராம்,<br>Asst Engineer, P. W. D சேப்பாக்கம்,<br>சென்னை 5 | .... | 101 |
| 4. | திருமதி T. K. பாப்பம்மாள்,<br>பத்தமடை, திருநெல்வேலி மாவட்டம் | .... | 100 |
| 5. | "கலிங்கா டெக்ஸ்டைல்ஸ்"<br>ஈரோடு. | .... | 101 |
| 6. | திருமதி தங்கம்மாள் மாரிமுத்து,<br>ஸ்ரீ முருகன் ஸ்டோர்ஸ்,<br>திருச்செங்கோடு. | .... | 100 |
| 7. | 'அருட்செல்வன்' ஸ்ரீ ராம்<br>S/o. திரு. D. செல்வராஜ் கீதா<br>தம்பதிகள், ஈரோடு. | .... | 101 |
| 8. | திரு. A. V. தனுஷ்கோடி,<br>35, M. C. C. தெரு, விருதுநகர்-1 | .... | 101 |

9 'குருபக்தி ரத்ன'
திரு V. A. அண்ணாமலை, மதுரை–1. .... 100

10. ஸ்ரீ ஆண்டாள் & கோ,
கொமாரபாளையம்-638 183. .... 100

11. திரு. M. N. ஜெகநாதன்,
ஷராப் வியாபாரம், சேலம்-2. ... 100

12. திருமதி சரஸ்வதி அம்மாள்,
தங்க நகை அச்சுவேலை, சேலம்–2. .... 101

13. 'அருட்செல்வன்' M. சரண்யன்
S/o. R. மணிவண்ணன் சாந்தி
தம்பதிகள் இராசிபுரம். .... 101

14. திரு. K. AR. M. RM. முத்து,
L. C. E., M. I. C. E.
கன்சல்டிங் இஞ்சினியர்,
காரைக்குடி-1. .... 100

15 திருமதி ரேவதி சிவப்பிரகாசம்,
'ஜோதி பாலமந்திர்'
சேலம்-14. .... 100

16. ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலயா
காஞ்சிபுரம் 605701. .... 100

17. Dr. O. G. விஸ்வநாதன், M. D.
குகை, சேலம்-6. .... 105

18. திருமதி K. சூரியகுமாரி,
கோவை-2. .... 101

| | | | |
|---|---|---|---|
| 19. | திரு C. K. ரங்கசாமி கவுண்டர்,<br>சுண்டப்பாளையம், கோவை-7. | .... | 100 |
| 20. | Dr. திரு N. பழனியப்பன்,<br>M B. B. S & M. S.<br>P. N. Hospital, நாமக்கல். | .... | 100 |
| 21. | Dr. திரு. A நடராஜன், M. B. B. S.,<br>P. N. Hospital, நாமக்கல். | .... | 100 |
| 22. | திரு M. பாலசுப்பரமணியம், B. A.,<br>Prop: அசோக் லாட்ஜ், நாமக்கல். | .... | 100 |
| 23. | புலவர் திரு. ப. கோவிந்தசாமி,<br>தமிழாசிரியர், திருவள்ளுவர்<br>மேல்நிலைப்பள்ளி,<br>ஆலங்கோட்டை-614018. | .... | 100 |
| 24. | திரு. K. A. A. சங்கரலிங்கம்,<br>தொழிலதிபர், திருநெல்வேலி-1. | ... | 100 |
| 25. | சிவானந்தா தாஸானுதாஸன்,<br>விருதுநகர். | .... | 108 |
| 26. | திரு. கேஸ்வர்,<br>ரயில்வே கார்டு-A, சேலம்-5 | .... | 101 |
| 27. | திரு. A. Y. C. A. அருணாஜல<br>முதலியார் & சன்ஸ்,<br>ஜவுளி வியாபாரம், சேலம்-1. | .... | 100 |
| 28. | திரு. R. K. இராஜகோபால், T. X. R.<br>தென் இந்திய ரயில்வே,<br>மங்களூர்-1. | .... | 101 |

29. திருமதி. R. இராஜலட்சுமி அம்மாள்,
M/o. K. சந்தானம், B. A., B L.
கோவை-1. .... 101

30. திரு. B. சிக்கையா அவர்கள்,
கம்பம். .... 100

31. திரு. T. K. S. மனோகரன், கம்பம். .... 100

32. திரு T. K. S. பரமானந்தம்,
கம்பம். .... 100

33. திரு. P. R. சக்கயப்பன்,
காரியதரிசி,
தெய்வீக வாழ்க்கைச் சங்கம்,
கம்பம். .... 100

# டாக்டர் தர்மபூஷணம்

## அத்தியாயம் — 1.

### முதல் நாள் அனுபவம்

முதன் முதலில் நான் ஸ்ரீ குப்புசுவாமி அய்யர் அவர்களைச் சந்தித்தது ஓர் இரவு. சிங்கப்பூர் டாக்டர் ரகுநாத அய்யர் அவர்களால் அனுப்பப் பட்டு ''ஜோகூர் பாரோ''வில் உள்ள வீதியில் இருந்த க்ரீன் துரை வைத்து நடத்தும் மெடிகல் ஹாலில் வந்து சேர்ந்தேன். இவர் அங்கு இல்லாத தால் நான் வந்ததும் இவரைச் சந்திக்க முடியவில்லை. நான் வெளிவராந்தாவில் இவர் வருகையை எதிர் பார்த்து உலாவிக் கொண்டிருந்தேன். மாலை சுமார் ஆறரை மணி இருக்கும்; புல் சூட்டு தலைப் பாகையுடன் நடுத்தர வயதுள்ள வசீகரமான ஒருவர் அந்த வராந்தாவை நோக்கி விரைந்து வந்தார். அவரே டாக்டர் குப்புசுவாமி.

வந்தவர்:— (என்னை உட்காரச் சொல்லி மெது வான குரலில்) ''தாங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்?''

நான்:— ''சிங்கப்பூர் டாக்டர் ரகுநாத அய்யர் என்னை அனுப்பினார்''.

குப்பு:— ''டாக்டர் ரகுநாத அய்யரா! அவர் அகத்தில் எல்லோரும் சௌக்கியமா?''

நான்:— ''ஆமாம்''

குப்பு:— ''சரி வாருங்கள்''. என்னை அவர் அந்த மெடிகல் ஹாலுக்குப் பின்னால் இருந்த தன்னுடைய ஜாகைக்கு அழைத்துச் சென்றார்.

உள்ளே சென்றவுடன் அவர் சிறிது இளைப் பாறிப் பிறகு தனது நித்திய கர்மானுஷ்டானங் களை முடிக்கச் சென்றார். அவர் வரும் வரையிலும் நான் தனியாக அறையில் அமர்ந்திருந்தேன். அவர் வந்தவுடன் இருவரும் போஜனத்திற்கு அமர்ந் தோம். உணவு அருந்தியபின் ஒரு ஹாலுக்குள் அழைத்துப் போனார்.

இவர் இரவு நித்திரைக்குச் சென்றதைப் பார்த்தால் மிகவும் ஆச்சர்யமாயிருந்தது. தரை யில் ஒரு சாதாரண பாய் தலையணையுடன் படுத்துக் கொண்டார். நானும் எனது படுக்கையை அப்படியே வைத்துவிட்டு, படுக்க துண்டு விரித் தேன். அவர் அங்கு போட்டிருந்த ஒரு கட்டிலைக் காட்டி "இது தங்களுக்காகத்தான் போட்டிருக் கிறது; அதில் படுத்துக்கொள்ளுங்கள்" என்றார். இவர் கீழே படுத்துக்கொள்ளும்போது நான் மட்டிலும் கட்டிலில் படுப்பது சரியில்லை என்று நான் யோசிக்கலானேன். இவர் அதை உணர்ந்து "இவ்வூர் சீதோஷ்ணம் உங்களுக்குப் புதிது; அது ஒத்துவரும் வரையில் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். எனக்கு இவ்வூர் பழகி விட்டது" என்றார். அவர் மனப்படியே செய்தேன்.

மறுநாள் காலையில் காபி தயார் ஆனதும், இவர் காபி சாப்பிடுமுன் எனக்கு ஒரு கப் எடுத்துக் கொடுத்தார். ஆனால் நான் "சில நாளாக காபி சாப்பிடுவதில்லை" என்றேன்.

குப்பு:— "காரணம் என்ன?"

நான் :— "கல்கத்தாவிலிருந்து ரெங்கூனுக்கு நானும் என் நண்பர் ஒருவருமாகக் கப்பலில் வந்தோம். அப்பொழுது காபி தயாரிக்கும் சாமான்கள் எல்லாம் எங்களிடமிருந்தன. கப்பல் புறப்பட்டுக் கொஞ்ச நேரத்தில் காபி சாப்பிடும்

சமயம் வந்தது. கப்பலிலேயே காபி தயார் செய்து அருந்தினோம். கப்பல் கல்கத்தாவை விட்டு 60 மைல் கடந்து கடலிற் சென்றவுடன் சுழற் காற்று வீசியது. கப்பல் ஆட்டம் கண்டது. அதிலிருந்தவர்களுக்குத் தலைச் சுற்றலும் வாந்தி எடுக்கவும் ஆரம்பித்தது. அதைக் கண்ட எங்களுக்கும் வாந்தி ஏற்பட்டது. அப்போது இந்த காபியின் துர்கந்தம் வாந்தியில் வீசியது. அது முதல் ரெங்கூனிலிருந்தது வரையில் நான் காபி சாப்பிட்டதில்லை'' என்றேன். மலேயாவில் இவரிடம் வந்த நாளிலிருந்து இவர் அன்புடன் கொடுத்ததை மறுப்பது உசிதமில்லை என்று கருதியே அந்த காபியை அருந்தினேன். பின்னர் பகல் வேளையில் உணவு அருந்த இவர் உட்கார்ந்தார். இவர் சாப்பிட்ட பின் நான் சாப்பிடலாமெனக் கருதினேன். அதை உணர்ந்த இவர் ''ஏன் தாங்களும் சாப்பிட உட்காருங்கள்!'' என்றார். நான் ''தாங்கள் உணவு அருந்திய பின் சாப்பிடுகிறேன்'' என்றேன்.

குப்பு:— ''என் கூட எப்படி இருந்து சாப்பிடுவது என்ற எண்ணம் போலிருக்கிறது. உணவு அனைவருக்கும், ஏன், எல்லா ஜீவன்களுக்கும் ஒன்றுதானே! ''உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்'' என்ற முதுமொழிபோல் எல்லோருக்கும் ஜீவன் எப்படி ஒன்றுபோலிருக்கிறதோ அது போலேதான் உணவையும் கடவுள் நியமித்திருக்கிறார். இதில் ஒருவர் உணவை சேர்த்து மற்றவர் உண்ண இயலாதல்லவா? ஆதலால் வேற்றுமையை ஒழித்து உணவு கொள்ள அமருங்கள்'' என்றார்.

அப்பொழுதே நான் (மனதிற்குள்) இவர் பெரிய வேதாந்த தத்துவமெல்லாம் பேசுகிறார்; போகப் போக செய்கை எப்படியென்று கவனிப்போம்,

எனக் கருதி அவர் மனப்படியே உணவு கொள்ள உடனமர்ந்தேன். நெய், தயிர் இவைகள் அவர் இடது புறமும், உணவுப் பதார்த்தங்கள் நடுவிலுமாக வைத்துக் கொண்டு அமர்ந்தேன். அன்னம் பரிமாறிக்கொண்டோம். நெய்யை அவர் கையாலேயே அக்கிண்ணத்திலிருந்ததை சரிபாதியாக எனக்கிட்டார். அந்த நெய் முழுதும் என்னால் சாப்பிடமுடியவில்லை. தயிரோ கத்தியால் அறுத்துப் போட வேண்டியதுபோல் அவ்வளவு கட்டியாக இருந்தது. இதற்கும் நெய்யின் கதியே ஏற்பட்டது. உணவு விஷயத்தில் இவர் எப்படியோ அப்படித்தான் பிற விஷயங்களிலும், எல்லோரிடமும் ஏற்றத்தாழ்வின்றி சமமாக நடந்து வந்தார்.

---

## அத்தியாயம் — 2.

## டாக்டரின் பரந்த நோக்கம்

இவ்வாறு சில நாட்கள் சென்றன. நாங்கள் இருவரும் காலையில் சுமார் நாலு மணிக்கே படுக்கையை விட்டு எழுந்துவிடுவோம். தலைகீழாக (சிரசாசனம்) நிற்கப் பழகுவோம். அவர் முதலில் ஒரு சுவர் அருகில் சென்று தலைகீழேயும் கால் மேலேயும் தூக்கும் போது நான் உதவியாயிருப்பேன். பிறகு என்னையும் அதுபோல் நிற்கச் செய்து அவர் உதவியாயிருப்பார். இப்படியே ஆசனம் பழகி வந்தோம். இந்த ஆசனப் பயிற்சியானதும் காலைக் கடன்களை முடிக்கச் சென்றுவிடுவார். பிறகு காலை சுமார் 7 மணிக்குத்தான் பூஜை பாராயணங்கள் முதலியன முடித்துக்கொண்டு காபி அருந்துவார். அந்த வீடு மிகப் பெரிது. அதன் முன்புறம் ஆபீஸ், பின்புறம் ஜாகை.

இவர் அந்த ஆபீஸுக்குப் பின்புறமுள்ள ஜாகையின் மேல் மாடியிலேதான் இருந்தார். காலையில் அணியும் மேல்நாட்டு உடைகளை இரவு தான் மாற்றுவார். ஒருநாள் நான் இவர் இருக்கும் மேல் மாடிக்குச் சென்றேன். சுவர் தெரியாமல் படங்கள் நிறைந்திருந்தன. அவை தெய்வப் படங்களும் இவர் உருவப் படங்களுமே. நான் இவர் உருவப் படங்களைப் பார்த்துக்கொண்டிருந்தேன். அவை பற்பல மாதிரிகளில் எடுக்கப்பட்டிருந்தன. இவர் என் பின்னால் வந்து நான் பார்த்துக்கொண்டிருப்பதைக் கண்டு ''என்ன பார்க்கிறீர்கள்? உங்களுக்கு இதுபோல் போட்டோ எடுக்கலாமோ?'' என்றார். நான் சிறிது வெட்கத்துடன் சரியென்றேன்.

அன்று மாலை சுமார் நாலு மணியிருக்கலாம். ஒரு சிறு துணி மூட்டையுடன் நானிருக்குமிடம் வந்து ''புறப்படுங்கள்'' என்றார். ''எங்கே'' என்றேன். ''என்கூட வாருங்கள்'' என்றார். சரியென்று அந்தத் துணி மூட்டையை வாங்கிக்கொண்டு அவருடன் சென்றேன். அங்கேயிருந்த ஒரு வீட்டு மாடிக்குச் சென்றோம். அது ஓர் அரண்மனை மாதிரி அவ்வளவு அலங்காரமாயிருந்தது. இவர் என்னிடம் கொடுத்த துணி மூட்டையை அவிழ்த்தார். அதில் இவர் அணியும் மேல்நாட்டு ஆடைகள் காணப்பட்டன. அவர் ''இவைகளை அணிந்துகொள்ளுங்கள்'' என்றார். அப்பொழுதுதான் என்னை இவர் அழைத்துவந்த காரணம் தெரியலாயிற்று. போட்டோ எடுக்க வேண்டுமென்ற எனது எண்ணத்தை இவர் அறிந்துகொண்டு முதலிலேயே படம் எடுக்குமிடம் சென்று எல்லா ஏற்பாடுகளும் செய்த பின்பே வந்தார். அவரது ஆடையையும் எடுத்துக்கொண்டு, என்னையும் அழைத்து வந்து ஆடைகளை அணியச் செய்து கூடஇருந்து நல்ல முறையில் மூன்று தினுசாக போட்டோ எடுக்கச் செய்தார்.

அச்சமயம் இவர் வயது 35, என் வயது 22 ஆக இருந்தாலும் இவர் ஆடை எனக்குத் தைத்தது போல் அவ்வளவு பொருந்தியிருந்தது. போட்டோ எடுத்தான பிறகு நாங்கள் எங்கள் ஜாகைக்கு வந்து சேர்ந்தோம். மறுதினம் மாலையில் மூன்று திணுசில் எடுத்த போட்டோக்கள் மூன்று மூன்று வீதம் ஒன்பது போட்டோக்களும், அவைகளின் நெகடிவ் களும் கொண்டு வந்து என்னிடம் கொடுத்து மிகவும் மகிழ்ச்சி கொண்டார்.

இவர் அலமாரியில் பன்மொழி நூல்கள் இருந் தன. அவைகளில் சில நூல்களை அவர் எனக்கு வாசிக்க கொடுத்துதவுவார். அந் நூல்களில் (P. V. Kuppuswami Aiyar) என்ற இவர் பெயர் முத்திரையடித்திருக்கும். இது கையெழுத்தா, அல்லது அச்செழுத்தா, என்று நான் இவரைக் கேட்கலானேன். அவர் என்னிடம் ''தங்களுக்கும் இம்மாதிரி வேண்டுமா?'' என்றதற்கு ''ஆம்'' என்றேன். உடனே ஒரு பேப்பரும் பேனுவும் என்னிடம் கொடுத்து ''தங்கள் பெயர் ஆங்கிலத்தில் கையெழுத்துச் செய்து கொடுங்கள்'' என்ருர். அவ்வாறே ஆங்கிலத்தில் பி. நரஸிம்மையர் என்று கையெழுத்துச் செய்து கொடுத்தேன். அதை அவர் சிங்கப்பூருக்கு அனுப்பினுர். ஒரு வாரத்தில் ரப்பர் ஸ்டாம்பு மை, சாப்பாகுத்தி ஆகியவை வந்தன. டாக்டர் அவற்றை என்னிடம் தந்து ''சரியாக இருக்கிறதா?'' என்ருர். ''ஆம்'' என்றேன். என் பெற்ருேர் கூட இம்மாதிரி உதவமாட்டார்கள். இவர் என் ஆசையை உடனுக்குடன் பூர்த்தி செய்து வந்தார்.

## அத்தியாயம் — 3.

## மன மாற்றம்

இவர் கொடுத்த நூல்களின் ஆராய்ச்சி மிகுதியால் நான் அந்நூல்களுக்கு அடிமையாகிவிட்டேன். ஒரு சில நாட்களில் உலக விரக்தி ஏற்பட்டது. எதிலும் வெறுப்பு. இம் மாயாப் பிரபஞ்சத்தைவிட்டு வெளியேறிவிட வேண்டுமென்ற உறுதி மனதில் குடிகொண்டுவிட்டது.. வர வர மனம் மாறிக்கொண்டே வந்தது. நான் எப்பொழுதும் பரிசுத்தமாக இருப்பதைக் கண்டு டாக்டர் மகிழ்வார். சில மாதங்களில் எனக்குத் தாடி வளர்ந்துவிட்டது. துணி துவைப்பதில்லை. தலையில் மயிர் பரக்க ஆரம்பித்தது. தைலம் தடவுவது நின்றுவிட்டது. மௌனம் அதிகமாய் ஆரம்பமாயிற்று நாகரீக டம்பாச்சாரிகளைக் கண்டால் (என் மனதிற்குள்) "நீங்கள் அழியும் உடலில் ஆடை ஆபரணுதிகளை ஏன் சுமந்து திரிகிறீர்கள். இந்த உடலின் புற அழுக்குகளைக் கழுவுகிறீர்கள். குவிந்து கிடக்கும் அக அழுக்குகளைக் கழுவ உபாயம் தேடாமல் அலைகிறீர்கள். வெண்ணையை வைத்துக்கொண்டு நெய்க்கு அலைவது போலும், ஆட்டைத் தோளில் போட்டுக்கொண்டு கிணற்றில் தேடும் இடையன் போலும் நடக்கிறீர்கள். உங்களிடமிருக்கும் உள் அழுக்குகளைக் கழுவ ஆத்ம ஞான நீர் உண்டு. அதைத் தேடியடைய முடியாத நீங்களும் ஒரு ஜன்மமா! நீங்கள் நடைப்பிணங்கள்" என்று அருவருத்தேன்.

டாக்டர் குப்புசுவாமியும், என் மனப் பக்குவத்தைக் கவனித்து வந்தார். காரணம் எதுவாயிருக்கலாமென்பதை அறிய முடியாமலிருந்தார். ஆனுல் ஏதோ ஒரு பைத்தியம் என்னைப் பற்றியிருப்பதாக மட்டிலும் உணர்ந்துகொண்டார்.

நல்ல தின்பண்டங்களை இவர் நண்பருடன் உண்டு மகிழ்வார். ஒருநாள் பகல் உணவு கொண்டார். அன்று செய்த உணவுப் பதார்த்தங்கள், மிகவும் சுவையாயிருந்தன. இவருக்கு உயிர்த்தோழர் ஸ்ரீ சுப்பிரமணி அய்யர் என்றொருவர் இருந்தார். அவர் வசிப்பது இவர் ஜாகையிலிருந்து சுமார் அரை மைலுக்குள் இருக்கும். அவருக்கு இந்த உணவுப் பதார்த்தத்தை, என்னைக் கொண்டு கொடுத்துவரும்படி வேண்டினார். ஆனால் எனக்கு அந்த சுப்ரமணி அய்யர் ஜாகை தெரியாது என்பது இவருக்குத் தெரியும். இவர் சில அடையாளங்களால் எனக்கு அறிவித்தார். இவர் அறிவித்தபடியே நானும் அப்பதார்த்தங்களை எடுத்துக்கொண்டு புறப்பட்டேன். என் அறையில் ஒரு துண்டைத்தவிர வேறொன்றும் கிடையாது. நான் அணிந்த ஆடைகள், விரல்களில் அணிந்த மோதிரங்கள், காதில் அணிந்த கர்ணபூஷணம் இவைகளுக்கு ஓய்வு கொடுத்து விட்டேன். பகல் சுமார் 12 மணியிருக்கலாம், சித்திரை மாத வெயிலில் தார் ரோட்டில் பாதரட்சையில்லாத காலுடன் நடக்கலானேன்.

நான் புறப்பட்டவுடன் இவர் சுப்பிரமணிய அய்யருக்கு போன் மூலமாய் நான் பதார்த்தங்களுடன் வரும் விபரம் அறிவித்தார். ஆனால் என்னை சுப்பிரமணி அய்யருக்குத் தெரியும். என் வரவை அவர் தமது வீட்டிலிருந்து பார்த்துக்கொண்டிருந்தார். (என் மனதிற்குள்) நாம் இடையில் ஒரு துண்டுடன் செல்லுகிறோமே, ஸ்ரீ சுப்பிரமணி அய்யர் ஜாகையோ எனக்குத் தெரியாது. டாக்டர் குப்புசாமி கூறிய அடையாளமுள்ள வேறு வீட்டிற்கு நான் மாறிச் சென்றால் என்ன செய்வது? அங்கு சிறுவர் சிறுமியர்கள் நமது கோலத்தைக் கண்டு கேலி செய்து, போடா பிச்சைக்காரா என்று

தள்ளினால்; என்ன செய்வது! மகான் பட்டினத்தடிகள் கோவணாண்டியாகப் பிச்சைக்குச் சென்ற போது ஒரு துஷ்டன் இவரை வேஷதாரி என்றும் துர்மார்க்கனென்றும் கருதி நையப்புடைத்தானாம்.

மகான் அடிகளை ஆனந்தத்துடன் ஏற்றுக்கொண்டு வயிற்றை நோக்கி ''என் வயிறே! உனக்காகவன்றோ பிச்சைக்கு வந்தேன். இந்த மரியாதை (தண்டனை) உன்னால் அன்றோ கிடைத்தது. ஆகையால் இனிமேல் உனக்காகப் பிச்சை எடுக்கச் செல்லேன்.

''இருக்குமிடந்தேடி என்பசிக்கே யன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்-
பெருக்க
அழைத்தாலும் போகேன் அரனே என்தேகம்
இளைத்தாலும் போகேன் இனி''

என்று கூறியவாறு ஓர் மரத்தடியில் சென்று இருந்து விட்டார். இதுபோல் நாமும் இந்த அநித்ய சரீரத்தை வளர்ப்பதற்குத்தானே இவரிடம் வந்திருக்கிறோம். ஆதலால் கிடைக்கும் மரியாதைகளை அன்புடன் பெற்றுக்கொள்வோம், எனக் கருதி நடக்கலானேன். ஒரு குரல் என்னைக் கூப்பிட்டது. ஆம், அதோ சுப்பிரமணிய அய்யரே அழைத்தார். உடனே அவ்வீட்டிற்குச் சென்றேன். பதார்த்தங்களைக் கொடுத்தேன். அவர் என்னைப் பார்த்து ''தாங்கள் வரும் விபரம் குப்புசுவாமி அய்யர் போன்மூலமாக எனக்கு அறிவித்தார்'' என்று கூறிப் பதார்த்தங்களைப் பெற்றுக் கொண்டு என்னை அனுப்பிவிட்டார்.

நாட்கள் ஓடின. யோக நூல்களைக் கற்றேன். நானும் ''இராஜயோகம்'' பயிலக் கருதினேன்.

ஒரு காகிதத்தில் இராஜயோக முறைகளைப் பற்றி எழுதி வைத்திருந்தேன். தினமும் மாலை 4 மணிக்கு ஆபீஸ் மூடிவிட்டு தேநீர் அருந்தியவுடன் டாக்டர் குப்புசுவாமி வெளியில் உலாவச் செல்வது வழக்கம். இவர் சென்றவுடன் நான் வாயிற் கதவைத் தாழிட்டுக் கொண்டு உள்ளே ஒரு நிம்மதியான அறையில் இருந்து சாதனம் செய்து வந்தேன். நான் தாழிடும் சத்தம் கேட்டே அவர் வெளியே செல்வது வழக்கம். ஒரு நாள் இவர் வெளியில் சென்றவுடன் நான் கதவை மூடினேன். தாழிட மறந்துவிட்டேன். அதை கவனித்த டாக்டர் சுவாமி திடீரென்று கதவைத் திறந்து வந்தார். ஏகாந்தமான ஓர் அறையில் நான் இருப்பதையும், என்னிடம் ஒரு காகிதம் இருப்பதையும் நான் இருந்த கோலத்தையும் கண்டு அந்தக் காகிதத்தை என்னிடமிருந்து வாங்கிப் பார்த்தார். எல்லாம் அறிந்து வியந்தார். ''நான் இன்றே தங்களை அறிந்தேன். தங்களை நான் கவனித்து வருகிறேன், தங்கள் மாறுபாட்டின் காரணத்தை அறியவே இன்று வெளியில் சென்றவன் திடீரென்று உள்ளே வந்தேன். கதவும் தாழிடவில்லை. இதுவும் நல்லது தான்'' என்றார்.

உடனே பலவிதமான தத்துவோபதேசம் பல உபமானம், உபமேயம், சிறு கதைகள் முதலியவற்றால் என் மனதை மாற்றி இளக வைத்து விட்டார். அவர் அன்பை வர்ணிக்கச் சொல் இல்லை. அவர் சொல் கல் மனதையும் கரைக்கும் சக்தி பெற்றது. அதனாலேதான் எல்லோருக்கும் இவரிடம் அவ்வளவு கவர்ச்சியிருந்தது. அன்று உலாவச் செல்வதை நிறுத்திவிட்டு, அவர் எனக்கு உபதேசிப்பதையே ஓர் பணியாகக் கொண்டார். எனக்கும் இவர் கூறிய அமிர்த மொழிகள் அனைத்தும் பசுமரத்தாணிபோல் மனதில் பதிந்துவிட்டன.

சர்க்கஸ்காரனின் சவுக்கு விலங்குகளை அடக்கி யாளும். பிடாரனின் மகுடி பாம்பை ஆளும். ஜாலக் காரர் மந்திரக் கோலால் பிறர் மனதை ஆளுவர். குப்புசுவாமி அய்யர் சொல்லே, என்னை ஆட்கொண்டது. இந்த உத்தம சீலர் உண்மைத் தத்துவத்தை உள்ளன்புடனும், உருக்கத்துடனும் உபதேசித்தார். என் மனம் இளகியது. சிறிது நாட்களில் பழைய நிலைமை அடைந்தேன்.

அதைக் கண்டு சுவாமி, மிகவும் ஆனந்தங் கொண்டார். சில நாட்களுக்குப் பின், நான் இவரிடம் "இமயமலைச் சாரலுக்குச் சென்று மகான்கள், ஞானிகள், யோகிகள் முதலியோர் களைத் தரிசித்து அவர்களுக்குத் தொண்டு புரிந்து மானிடப் பிறவியைப் புனிதமாக்க விரும்புகிறேன். அனுமதி உத்தரவாகட்டும்" என்று வேண்டினேன். அதைக் கேட்டு அவர் புன்னகையுடன் சொன்னதாவது:— அதற்கு இன்னும் பக்குவம் வரவில்லை "ஆங்கால முண்டு மெய் வருந்தவேண் டாம், தேங்காய்க்கும் இளநீர் போய்ச் சேருமே" என்பது வசனம். சில காலம் நீங்கள் இல்லறத்தை நல்லறமாகவும், வாழ்க்கையைத் தூய்மையுடனும், நேர்மையுடனும் நடத்தி வாருங்கள். பக்குவம் வரும்போது தங்கள் எண்ணம் நிறைவேறிவிடும். இதில் சிறிதும் ஐயமில்லை. ஒருவன் தன் வாழ் நாளில் எதை அதிகமாய் நேசிக்கிறானோ அதையே பெறுவான் என்பது அனுபவ சித்தாந்தம்.

இம்மாதிரி என் மனம் அடிக்கடி மாறிக் கொண்டிருப்பதைக் கண்டு இவர் மாலையில் உலாவச் செல்லும்போது என்னையும் கூடவே அழைத்துப் போவார். அது "ஜோகூர்பாரோ" வில் கடலில் பாலம் கட்ட ஆரம்பித்த சமயம். ஆயிரக்கணக்கான கூலிகள் வேலை செய்தார்கள்.

கப்பலிலிருந்து சரக்குகளை இறக்கி வண்டிகளில் ஏற்றிச்செல்லும் காட்சி. என்னை டாக்டர் அந்த இடங்களுக்கு எல்லாம் கூட அழைத்துச் சென்று விபரமாக எல்லாவற்றையும் காண்பித்தார். பிறகு கால்பந்து விளையாடும் மைதானத்திற்குச் சென்று அங்கு நடக்கும் விளையாட்டுக்களைப் பார்த்தோம்.

கடற்கரை சென்று புல் தரையில் உட்கார்ந்தோம். அப்பொழுது அவர் ''உலகத்திலிருந்து கொண்டே மாயையை எதிர்க்க வேண்டும்'' என்று ஞானோபதேசம் செய்தார்.

---

## அத்தியாயம் – 4.

## டாக்டரின் உதார குணம்

இவரது வேதாந்த உரைகளும் கட்டுரைகளும் பிறருக்குப் பயன்பட வேண்டுமென்றனர் நண்பர். சிங்கப்பூரிலுள்ள மலேயா ட்ரிப்யூன் பத்திரிகை ஆசிரியரும் வேண்டிக் கேட்டார். இவரது கட்டுரைகள் அப்பத்திரிக்கையில் வெளிவரலாயின. இவரது வைத்தியத் தொழிலில் உள்ள ஆராய்ச்சியின் மேன்மைக்காக இங்கிலாந்திலிருந்து, இவருக்குப் பல உயர்தரப் பட்டங்கள் வழங்கப்பட்டன. இவை போக இவருடைய தயாளகுணமும், பரந்த நோக்கமும், தர்ம சிந்தையும், சிங்கப்பூர், குவாலாலம்பூர் முதலிய பிரதேசங்களில் புகழ்பெற்றன. மக்கள் இவரை 'டாக்டர் தர்மபூஷணம் குப்புசாமி அய்யர்' என்று அழைத்தனர். இவரை அறியாதார் ஒருவரும் இலர். உலகத்திலிருந்துகொண்டே உலகை வென்ற உத்தம வீரர் எனலாம். அக்காலத்திலிருந்த பற்றற்ற வாழ்க்கையே அவரை இம்மகோன்னத ஞான நிலைக்கு இட்டுச் சென்றது. அப்பொழுது

உலகோர் இவரை குடும்பத்துறவி என்றும் கூறுவார்கள். இவர் மனத்துறவியே; ஆனால் புறத்துறவுக்கும் வாழ்வைப் பண்படுத்தி விதை விதைத்துப் பயிரிட்டு வந்தார். அப்பயிர் சில நாளில் செடியாய், மரமாய், பூவாய், காயாய், பழமாய் ஞானக்கனிரசம் பொழிகிறது. ஆத்மீகப் பசியைத் தீர்க்கிறது, இந்த ஞானக்கனி. அகத்துறவு இல்லாத புறத்துறவு துறவன்று. புறத்துறவு அற்ற அகத்துறவு மிகவும் வலிவுள்ளது. இவ்வலிவுள்ள அகத்துறவையே இவர் கடைப்பிடித்துவந்தார்.

''ஆற்றுவா ராற்றல் பசியாற்றல் அப்பசியை மாற்றுவா ராற்றலிற் பின்'' என்றார் வள்ளுவர். ''ஐயமிட்டுண்'' என்றார் ஔவை பிராட்டியார்.

நமது டாக்டர் அன்னதான வள்ளல். தம்மை அண்டினவருக்கு எல்லா உதவியும் செய்யும் பரோபகாரி. கொடையில் கர்ணன் என்பதுண்டு. ஆனால் பொருளையே தந்தான். அவன் பசி தீர்க்கும் அன்னதானம் செய்தவனல்ல. ஒருநாள் கர்ணன் தன் அரண்மனை உப்பரிகையில் உலாவிக்கொண்டிருந்தான். அப்போது வாசலில் ஓர் ஏழை ''ஐயா பசி, அன்னம் போடுங்கோ மகராசா'' என்று முறையிட்டான். கர்ணன் தர்மராஜா சத்திரத்தையே சுட்டிக் காட்டினான். ஏழை அங்கே பசியாறினான். கர்ணன் உயிர் பிரியும்போது கண்ணனிடம் ''ஏ கண்ணா! எனக்குத் தாகம் அதிகமாயிருக்கிறது, தண்ணீர் கொடு'' என்று கேட்க பகவான் ''உனது கையை வாய்க்கு நேராகப் பிடித்துக்கொள், நான் தண்ணீர் கொடுக்கிறேன்'' எனக் கூறினான் கண்ணன். அவ்வாறே கர்ணன் வலது கையை வாயிடம் வைத்துக்கொள்ள பகவான் தண்ணீர் ஊற்றினார். அத்தண்ணீர் கர்ணன் கையில் பட்ட உடனே எல்லாம் தங்கமாகிவிட்டது. அதைக்

கண்ட கர்ணன், ''ஏ ! கிருஷ்ணு ! தண்ணீர் எல்லாம் தங்கமானதே, தாகத்தை தணிக்க என்ன செய்வது'' என்று முறையிட்டான். பகவான் சொன்னதாவது : ''ஏ ! கர்ணு ! உன் வாழ்நாளில் நீ ஸ்வர்ண தானம் செய்தாய்! பசியை தீர்க்கத் தக்க அன்னதானம் செய்யவில்லையே? அந்த ஏழைக்கு தர்மராஜாவின் சத்திரத்தைச் சுட்டிக் காட்டிய உனது வலது சுண்டு விரல் செய்த புண்ணியம்கூட செய்யவில்லையே? ஆகையால் அந்த சுண்டு விரலை வாயில் இட்டு உறிஞ்சினுல் தண்ணீர் வரும். அதைப் பருகி தாகந்தீர்'' என்ருர். அவ்வாறே கர்ணன் சுண்டு விரலை வாயில் வைத்து உறுஞ்சும்போது தண்ணீர் வர அதைக் கண்டு களிப்படைந்து தானத்திற் சிறந்தது அன்னதானமே என்றுணர்ந்தான்.

தர்மபுத்திரர் அன்னதானமே செய்து வந்தார். ஆனுல் நம் டாக்டர் குப்புசுவாமியோ, மேற்படியார் களையும் கடந்து, உடல், பொருள், ஆவி மூன்றை யும் பிறருக்காக எத்தருணத்திலும் தியாகம் புரிய தயாராக இருந்து வந்தது பெரும் ஆச்சரியமா யிருந்தது.

ஒருநாள் பகல் சுமார் 11 மணியிருக்கலாம். நாங்கள் சாப்பிடப்போளும். வெளியிலிருந்து ''ஐயா புண்ணியவானே! எனக்கு மிகவும் பசியா யிருக்குதையா'' என்று ஒரு குரல் அய்யரின் செவிகளில் விழுந்தது. உடனே விரைந்து வாயிற் புறம் சென்று அவ்வேழையைப் பார்த்து ''ஐயா! தங்கள் பசியை இப்பொழுது தணித்துவிடுகிறேன்'' எனக்கூறி உள்ளே வந்து ஒரு தட்டில் இலை போட்டு அந்த இலையில் எங்களுக்கு செய்திருந்த உணவில் பாதிக்கு மேலும் வைத்து மற்ற காய்கறி வகையருக் களும் இட்டு நெய்யில் பாதியை அந்த அன்னத்தில்

போட்டு, அவ்வுணவைக் கொண்டுபோய் அந்த ஏழைக்குக் கொடுத்து உண்ணச் செய்து, தானும் கூட இருந்து மேலும் வேண்டியதை விசாரித்துக் கொண்டிருந்தார். அந்த ஏழை அறுசுவை உணவை, மிக்க மகிழ்ச்சியுடன் உண்டு ''தர்ம ராசாவே! நான் இதுவரையில் எத்தனையோ ஊர் களிலும், வீடுகளிலும் பிச்சை எடுத்திருக்கிறேன். ஆனால் தங்களைப்போல் உண்மையான பேரன்புடன் கொடுத்து உண்ணச் செய்து மேலும் கூட இருந்து உபசரித்ததை இங்குதான் தங்களிடம் கண்டேன்'' எனக்கூறி வாழ்த்திச் சென்றான்.

ரந்திதேவர் 48 நாள் நிர்ஜல உபவாச விரத மனுஷ்டித்து கடைசி நாளில் நித்ய கர்மானுஷ் டானம் முடித்து உணவு அருந்தச் சென்றார். ஏழை ஒருவன் வந்து ''ஐயா பசி'' என்றான். அன்புடன் அவ்வுணவைக் கொடுத்துக் களிப்புற்று ரந்திதேவர் நீரருந்தச் செல்லுங்கால் அப்போது ஒருவன் வந்து ''ஐயா தாகம்'' என்றான். அத் தண்ணீரையும் அவனுக்குத் தந்துவிட்டார் ரந்திதேவர். நமது டாக்டரும் மற்றொரு ரந்திதேவரே.

அந்த ஏழைக்கு உணவு அளித்து அனுப்பிவிட்ட பிறகு நாங்கள் உணவு கொள்ள அமர்ந்தோம். ஆனால் இருவருக்கும் உணவு குறைவாயிருப்பதைக் கருதி பிறகு அன்னம் செய்து சாப்பிடலாமென நினைத்தேன். இவர் நான் நினைப்பதை குறிப்பால் அறிந்துகொண்டு என்னைப் பார்த்து ''ஏன்! உணவு குறைந்து விட்டதே என்று நினைக்கிறீர்களோ?'' என்று கேட்டார். நான் மௌனமாக நின்றேன். ''அந்த ஆத்மா எவ்வளவு ஆனந்த முடன் இந்த உணவை உண்டிருக்கிறான். அவன் அடைந்த பூர்ண ஆத்ம திருப்தியே நம் உணவுக்

குறைவை நிறைத்து விடுமன்ரே?'' என்று மகிழ்ந் தார். இருவரும் மீதியுணவை அருந்திேஞம். திருப்தியாக இருந்தது.

ஒருநாள் பகல் ஒரு மணிக்கு நாங்கள் உணவு அருந்தியபின் ஒருகிழவன் "ஐயா பசிக்குது!" என்ருன் ஓர் ஏழை தமிழன். இவர் ஆபீஸ் வராந்தாவில் உலாவிக்கொண்டிருந்தார். இவர் சட்டைப் பையில் எப்பொழுதும் சில்லரை இல்லாமல் இருக்காது. அந்த ஏழை கூறிய மொழிகள் இவர் செவிகளில் விழுந்தவுடன் நெருப்பை மிதித்தவர்போல் ஓடிவந்து, அந்த ஏழையைப் பார்த்தார். "ஐயா பெரியவரே! இவ்வூர் ஓட்டலில் சென்று போஜனம் செய்யுங்கள்'' என்று கூறித் தன் சட்டைப் பையிலிருந்து 40 சதம் (100 சதம்=ஒரு வெள்ளி, சுமார் ரூ. 1-12-0. 40 சதம் ஒருவேளை சாப்பாட்டு விலை) கொடுத்து அனுப்பினுர். அதை அந்த ஏழை பெற்றுக்கொண்டு "கர்ண மகா ராசாதான் நீங்கள், கடவுள் உங்களுக்கு எல்லா நன்மையும் தரட்டும்'' என்று வாழ்த்திச் சென்ருன்.

பிறகு ஒருநாள் தொண்டையில் ஏதோ உபாதி யால் ஒரு ஏழை இவரிடம் வந்து "ஐயா தரும வானே! என்னிடம் பணமில்லை. நான் ஏழை, எனக்கு வந்த உபாதியோ ராஜவைத்தியம் செய்ய வேண்டிய முறையில் இருக்கிறது. தாங்கள் ஏதா கிலும் உபகாரம் செய்து காப்பாற்றவேண்டும்'' என வேண்டினுன். இவர் அவனை உள்ளே அழைத்துப் பரிசோதித்துப் பார்த்தார். நோய் பெரிது என்று தெரிந்ததும், உடனே சிங்கப்பூர் சர்க்கார் ஆஸ்பத்திரியில் இருக்கும் பெரிய ஸர்ஜனுக்கு அந்த நோயின் விபரத்தை போன் செய்தார். ஸர்ஜன் இவர் நண்பர். இவர் சொல்லை

தட்டமாட்டார். அவர் அந்த ஏழையைச் சிங்கப்பூருக்கு அனுப்பும்படி பதிலுரைத்தார். நமது டாக்டர் அந்த ஏழைக்குப் பிரயாணச் செலவும் சாப்பாட்டு செலவும் கொடுத்து அனுப்பினர். ஏழை அங்கு சென்று ஸர்ஜனைப் பார்த்தார்.

ஸர்ஜன் நம் குப்புசாமி அய்யர் அனுப்பியதால் எப்படியும் இந்த நோய் கடவுள் கிருபையால் குணமாகும் என்று நம்பி ஆபரேஷன் செய்தார். நடுத்தொண்டையில் மிளகத்தனை துளை செய்து அதில் பொத்தான் மாதிரி ஒன்றைப்புகுத்தி தைத்து குணப்படுத்திவிட்டார். சுவாசம் விடும்போதெல் லாம் சிறு விசில் மாதிரி சப்தம் வந்தது.

அந்த ஏழை சிங்கப்பூரிலிருந்து ''ஜோகூர் பாரோ'' வந்து இவ்வரைத் தண்டனிட்டு ''எனக்கு உயிர்ப் பிச்சை அளித்த உத்தமரே! தங்கள் தயவு இல்லாவிடில் நான் பிழைத்திருக்க மாட்டேன். ஆஸ்பத்திரியில் டாக்டர்கள் பணியாளர்களிடம் என்னை நன்ருய்க் கவனிக்கும்படி உத்தரவிட்டார் கள். அதுபோலவே அவர்களும் கவனித்தும் வந்தார் கள். டாக்டர்கள், ஸர்ஜன் இவர்கள் தினமும் வந்து என்னைப் பார்த்துப் போவார்கள். முதல் நாள் ஆபரேஷன் நடந்தது, மறுநாள் அந்த ஸர்ஜன் வந்து என்னிடம் கூறியதாவது ''ஐயா! தாங்கள் மிகுந்த பாக்கியசாலி ''தர்மபூஷணம் குப்புசாமி அய்யர்'' அவர்களிடம் வந்து சேர்ந்தீர்கள். நாங்கள் அவரை எங்கள் குலகுருவாக வைத்திருக்கிறோம். அவர் கூறியதற்கு எவ்வித தடையுமின்றி ''இறைவன்'' கட்டளையெனக் கருதி நடந்து வருகிறோம். இது அபாயகரமான நோய். அவர் அனுப்பியபடியால் உம்மை ஏற்றுக்கொண்டோம். கடவுளருளால் எல்லாம் சுபமாகவே முடிந்தது'' என்ருர். டாக்டர் அந்த ஏழைக்கு மீண்டும் பணம் கொடுத்து சொந்த ஊருக்கு அனுப்பினர்.

சுப்பிரமணியம் என்ற ஒரு தமிழ் வாலிபர் ஆங்கிலம் கற்று வேலை கிடைக்காமல் சிங்கப்பூர், குவாலாலம்பூர் முதலிய இடங்களில் அலைந்து கடைசியில் இவரிடம் வந்து தமது குறைகளைக் கூறினார். இவர் அதைக் கேட்டு தாங்கள் எங்களுடனே இருங்கள், தங்களுக்கு எப்படியாவது வேலை கிடைக்குமென்று வாக்களித்தார். டாக்டர் போன் மூலமாயும் கடித மூலமாயும் சிலரை நேரில் கண்டும் விசாரித்தும் வந்தார். சில நாளில் 55 வெள்ளி சம்பளத்தில் ஒரு வேலை பண்ணி வைத்தார். அவருக்கு இருக்கச் சௌகரியமாக 15 வெள்ளி வாடகையில் வீடமர்த்திப் பாத்திரம் பண்டம் வாங்கிக் குடித்தனம் வைக்கச் செய்து 55 வெள்ளி போதாவிட்டால் வேண்டியதை என்னிடம் கேளும் என்றார். என்ன தயாளம்! தாராளம்!

---

## அத்தியாயம் – 5.

### டாக்டரின் பக்தி

மலேயாவில் தமிழர் வணங்கும் கோவில்கள் உண்டு. தமிழர் என்றால் கோவிலும் இருக்கும். "கிள்ளங்கி ஸம்பாயம்" என்பர் மலாய் நாட்டார். அக்கோவிலில் திருவிழா கொண்டாடப்படுவதும் உண்டு. இரவில் சுவாமி புறப்படும்போது, நாங்களிருக்கும் வீதி வழியே செல்ல வேண்டும். ஒரு நாள் நமது டாக்டர் சுவாமிக்கு மண்டகப்படி சேவித்தார். புஷ்பாலங்காரம் கற்பூர ஹாரத்தி நைவேத்தியம் முதலியவை நடத்தி எல்லோருக்கும் தமது கையினாலேயே திருப்தியாக பிரசாதம் அள்ளி அள்ளிக் கொடுத்தார். எல்லோரும் டாக்டரின் பக்தியை வியந்து கொண்டாடினார்கள். ஜாதிமத பேதமில்லாமல் எல்லோருக்கும் நன்மை செய்து

எல்லோர் உள்ளத்திலும் இடம் பெற்ருர் டாக்டர். மண்டகப்படி முடிந்த பிறகு டாக்டர், பகவத் கைங்கர்யமே முக்கியம் என்று சொன்ஞர்.

நாம் இப்போது ஊருக்குப் போவோமாஞல் பணச் சிலவுதானே; அந்தப் பணத்தை மிச்சமாக்கி இப்படி பகவத் கைங்கரியம் செய்வதே ஆனந்த மாகும். பதித பாவனஞன பகவானின் கிருபையே அளவற்ற செல்வம். அவன் அன்பருக்கு அன்பன். பகவானே சதா பஜிக்க வேண்டும். அவர் நாமத் தையே உச்சரிக்க வேண்டும் என்று வேதங்கள் கட்டளேயிடுகிறது. அவரது நாம ஜெபத்தை இடைவிடாது செய்ய வேண்டும். சுருதி, யுக்தி அனுபவங்களின் முடிவு பகவத் பக்தியே. அதஞலே தான் பெற்ருேர் மக்களே இறைவன் பெயரிட்டு அழைக்கின்ருர்கள். ராமன், கிருஷ்ணன், கோபாலன், சிவன், முருகன், சங்கரன் என்று ஆண் குழந்தைகளேயும்; லெக்ஷிமி, ஸரஸ்வதி, பார்வதி, சீதை, மீஞட்சி, காமாட்சி என்று பெண் குழந்தை களேயும் பெயரிட்டு அழைக்கிருேம்.

''பகவன் நாமத்தை நிறைவாக உச்சரிக்க வேண்டும். தற்பொழுதுள்ள நாகரீக தாஸர் உள்ள பெயரைச் சுருக்கி கோபு, கிச்சு, ராமு, கிட்டு, சுப்பு, மணி, சங்கு என்றும் எச்சி, சச்சு, மீனு, காமு என்றும் அழைக்கின்றனர். பகவான் நாமங்களே அக்ஷரலோபமில்லாமல் நிறைவாக உச்சரித்தாலே பலனுண்டு. இன்றேல் பாபம் வரும். பகவன் நாமம் மந்திரமாகும். சரியானபடி உச்சரிக்கா விட்டால் மந்திர சக்தி குறையும். பலன் கிடைக் காது. ஓர் உதாரணக் கதை சொல்லுகிறேன்:—

இது பாகவதம் ஆருவது ஸ்கந்தம், முதல் அத்தியாயத்தில் உள்ளது. அஜாமிளன் என்ற

பிராமணன் தன் கர்மாக்களை விட்டுவிட்டு குடி, 'கூத்தி, சூது ஆகிய பாதகங்களைச் செய்து கெட்டான். இவனுக்குப் பத்து பிள்ளைகள் உண்டு. கடைசிப் பிள்ளையின் பெயர் ''நாராயணு''. அஜாமிளனுக்கு இறுதி காலம் வந்தது. எமதூதர்கள் வந்து விட்டனர். அப்போது அஜாமிளன் உரத்தகுரலில் ''ஏ நாராயணு!'' என்று தன் கடைசிப் பிள்ளையைக் கூவினுன். வந்த எமதூதர்கள் நாராயண சப்தம் கேட்டு திகைத்தனர். அப்போது வைகுண்டத்திலிருந்தும் விஷ்ணு தூர்தர்கள் வந்து நின்றனர். இரு கூட்டத்தாருக்கும் தர்க்கம் நடந்தது. விஷ்ணு தூதர்கள் ''அஜாமிளன் முதலில் ஜபதபம் செய்து ஒழுங்காகவே இருந்தான்'' என்றனர். எமதூதர்கள்:—''அவன் குடி கூத்தியால் கெட்டான்,'' என்றனர். ''அவன் இப்போது 'நாராயணு' என்றதால் அந்தப் பாபம் பரிகாரமாய் விட்டது'' என்றனர். எமதூதர்கள் சென்று விட்டனர். அஜாமிளன் கண் விழித்து தூங்கி எழுந்ததுபோல் எழுந்தான்.

''இங்கே பாசமும் வாளும் கொண்டு பயங்கரமான எமதூதர்கள் வந்தார்களே, எங்கே?'' என்று கேட்டான். அவர்களை நாராயண தூதர்கள் விரட்டியடித்தனர் என்று கேட்டதும் அவன் உள்ளம் பரம பக்தியால் உருகியது; தன் பாபங்களுக்கு வருந்தித் திருந்தி பரம பாகவதனுனுன்; இறுதி காலத்தில் ஆண்டவனே அவனை ஆட்கொண்டு மோட்சமளித்தார்.

''ஆலயம் தொழுவது சாலவும்நன்று'' என்ருள் ஔவை. ''இந்தக் காலம் இதைப் பலர் புறக்கணிக்கின்றனர். சரீரம் திடமாயிருக்கும்போது, ஏன் ஆலய வழிபாடு செய்யக் கூடாது? அங்கஹீனர்களால்தான் இயலாது. ஆனுல் பகவான்

எவ்வளவு கருணை காட்டுகிறார்? மக்கள் பிழையைத் தாய் பொறுப்பது போல, நமது பிழைகளை அவன் பொறுக்கிறான். கோவிலுக்குப் போக முடியாதவர்கள், தரிசிக்கட்டும் என்று நமது தெருவில் பவனி வருகிறான். சுவாமி எழுந்தருளுவதன் பொருள் இதுவே. ஆண்டவன் உலா வரும்போது தரிசிக்காதவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் நாடகம், சினிமா, கூத்து, கேளிக்கை என்று மனதை விட்டலைந்து கெடுகிறார்கள். இவர்கள் பகவத் பக்தரை நாடுவதில்லை. நாகரீகாசுரன் கையிற் சிக்கி அலைகிறார்கள். பரம பக்தரிடம் அனுச்சார அரக்கன் வாலாட்டமாட்டான். உலகை அசுர மாயம் கவராமல் பரமபக்தர்களே காவல் புரிகிறார்கள். எல்லாம் வல்ல இறைவனை முப்போதும், எப்போதும் போற்றி வணங்கி வழிபடவேண்டும். அதுதான் மனிதனுக்கழகு. அதுவே நமது கடமை'' என்று அன்று டாக்டர் உபதேசித்தது இன்றும் என் செவிகளில் ஒலித்துக்கொண்டிருக்கிறது. இவ்வாறே வெளியே உலாவும் போதெல்லாம் அவர் அரிய உபதேசங்களைச் செய்தார்.

''மனிதன் தன் புத்தியே பெரிதென மயங்குகிறான். புத்திக்குமேல் பெரிய சக்தி ஒன்று மறைந்துள்ளது. புத்தியென்பது மூளைக்குள்ளே கட்டுண்டு கிடப்பது. அது மட்டுப்பட்டது. அது அகண்டாகாரமாய், அளவு கடந்ததாய், நிர்விகாரமாய் யாவராலும் போற்றப்பட்டு வரும், பிரும்ம சக்தியைவிட எவ்வாறு மேம்பட முடியும்? பலர் புத்திக்கு மேலான ஒரு சக்தியுமில்லை என்கின்றனர். ஈரேழுலகத்திற்கும் கர்த்தாவாய், ஈ, எறும்பு முதலிய எண்பத்தி நான்கு லட்சம் ஜீவராசிகளுக்கும் புத்தியைக் கொடுத்தும், எல்லா உயிர்களுக்கும் உயிராய் விளங்கும், அந்த பிரும்ம சக்தியைவிட அற்ப மனிதனின் சிறு புத்தி பெரிதாகிவிடுமோ?

மேலும் மனிதனிடமிருக்கும் இந்தப் புத்திக்கு அந்த சக்தியில்லாவிட்டால் எவ்வாறு உயிர்பெற்று நிலவக்கூடும்?

அனைத்தையும் எரிக்கும் நெருப்பைப்போல் ஆசையானது மனிதனைக் கரிய வாட்டுகிறது. காமப் பயித்தியமோ அதி பயங்கரமானது. உலகிலே ஆசைப் பித்தம் ஆளைத் தடுமாற்றுகிறது. பந்தத்தை உண்டுபண்ணி அந்தகாரத்தைப் பரப்பி, அதனால் ஏற்படும் துன்பத்தை அனுபவிக்கச் செய்கின்றன. எங்கும் படர்ந்திருக்கும் இந்தத் துன்பமாகிய கொடிய காட்டைக் கடந்து செல்ல விரும்பினால், உறுதியான தெய்வ நம்பிக்கையும் திடசித்தமும் வேண்டும்.

''ஒன்றுகக் காண்பதே காட்சி புலனைந்தும்
வென்றுன்; தன், வீரமே வீரமாம்-என்றுந்தான்
சாவாமை கற்பதே கல்வி; தனைப் பிறர்
ஏவாமல் உண்பதே ஊண்.'' என்று ஔவை

பாடியிருக்கிறுள்.

மேலும் திருவள்ளுவர் :—

''சுவையொளி யூறேசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு'' என்கிறுர்.

''ஆகவே புலனடக்கம் இல்லா ஒருவனும், மனம் போகிற போக்கிலே போகிறவனும், நான் எனது என்ற அகங்கார மமகாரம் பிடித்தவனும், இறைவனிடம் அன்பு செலுத்த இயலாது. ஓர் ஒட்டகம்கூட ஊசியின் காது வழியாக நுழையக் கூடும். ஆனுல் நாஸ்திகச் செல்வர் சுவர்க்க வாசலிற் கூட நுழைய முடியாது. ஸர்வஸங்க பரித்யாகம் செய்த சாதுவே அந்த ஆத்தும சாம்ராஜ்ய பதவியை அடையத் தகுந்தவன்.

''பெண்ணுசை, மண்ணுளாவும், மதிமயக்கும், மானம் பறிக்கும். இப்படி—மதியிழந்தவர் பலர். சிலர் திருவருட்கருணையால் ஒருநாள் நல்லறிவு பெற்று உய்கிறுர்கள். ஒருவன் முற்பகுதியில் பல அநியாயங்களையும், அதர்மங்களையும் செய்து காமக் குரோதாதிகளில் உழன்று பாப புண்ணியம் பாராமல் கண்டபடி நடந்து ஜென்மத்தைப் பாழாக்குகிறுன். ஆனுல் இவனுடைய பூர்வ புண்ணிய விசேஷத்திஞல் அறிவு உதயமாகிறது. இதற்கு முன் தான் இழைத்த தீமைகளை நினைத்து மனம் வருந்தி இறைவனிடம் மன்னிப்புங் கோறுகிறுன். பக்தி வளர வளர முன் செய்த தீமைகளெல்லாம் ஒழிந்து அவனுக்கு சுத்த ஞானம் ஏற்படுகிறது.

''துளசிதாஸர், பில்வமங்கள், அருணகிரிநாதர் இவர்கள் போன்ற பக்தர் முக்தராகி உலகிற்கு வழிகாட்டுகிறுர்கள்.

''ஒரு தடாகத்தில் அல்லி, ஆம்பல், நெய்தல், குவளை முதலிய பல மலர்களிருப்பினும், அவற்றின் இடையே ஒரு தாமரை மலர் இருந்தால் அத்தடாகம் அழகு பொலியும். வானத்தில் பல நட்சத்திரங்கள் இருப்பினும், சந்திரனில்லாவிடில் அவ்வானம் பிரகாசிப்பதில்லை. எத்தனை வேத சாஸ்திர புராணங்கள் ஓதினுலும் பயனில்லை. மூவாசையை ஒழித்தவனிடமே, ஞானம் உதய மாகும்'' என்று சொன்ஞர் டாக்டர். இப்படியாக அரியவாக்கியங்களையும், பட்டினத்தார், தாயு மானவர் இவர்களுடைய பாடல்களையும் பாடிக் கொண்டிருப்பார்.

பின்னொரு நாள் அவர் உபதேசித்ததாவது:— குணமும் குற்றமும் கலந்தே தோன்றும். ''குற்றம்

பார்க்கில் சுற்றமில்லை.'' பிறர் குற்றத்தையே நாம் பார்த்துக்கொண்டிருந்தால் இவ்வுலகு முழுதிலும் குணத்தைக் காண்பது அரிதாகிவிடும். இப்படிக் கருதுவோர்க்கு மனச் சாந்தியும் இராது; ஆகை யால் இரண்டையும் நன்கு ஆராய்ந்து, குணமிருந் தால் கொள்ளுதலும் குறையிருந்தால் தள்ளுதலும் வேண்டும்.

ஒருவரிடம் குணத்தைக் கண்ட மனம் குற்றத்தை அவரிடம் காணது. குற்றத்தைக் கண்டபின் அதையே காண்பதுவும் தூற்றுவதுமே யன்றி குணத்தைக் காண இயலாது. இப்படியே ஒன்றைக் கண்டால் மற்றென்றைக் காணமுடியாத் குறைபாடுள்ளது, மனம்.

இவ்வுலகில் ராகத்துவேஷங்கள் அதிகரித்து வருகின்றன. இதனல் உண்மையைக் காண்பதே அரிதானது. சிலர் ஒருவனை புகழ்வர், சிலர் இகழ்வர். ஆனல் ஒவ்வொருவரிடமும் இரண்டும் கலந்தே இருக்கிறது ''பெருமைக்கும் சிறுமைக்கும் அளவுகோல் ஒருவர் செயலே. அதனல் வள்ளுவரும் பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக் கல்'' என்கிறர்.

ஒருவன் ஒரு வஸ்துவை அடைய ஆவலுடன் விரும்புகிறன். விரும்பிய வஸ்து கனியோ, கன்னியோ, எதுவாயினும் சரி, கிடைக்காவிடில் மனம் வருந்துகிறன். கிடைத்தால் மகிழ்ச்சி அடைகிறன். ஆனல் இம் மகிழ்ச்சி எதுவரையில் நிற்கும்? அவனிடம் கிடைத்த கனியை அருந்திய பின் அவனுடைய அவாவும் குறைந்து விலகிவிடு கிறது. பிறகு அக்கனி அவன் முன்னல் இருப் பினும் அதில் அவன் இச்சை கொள்வதில்லை.

இவ்வாறே கன்னியின் இன்பமும். ஆகவே உலகில் காணும் வஸ்துக்கள் அனைத்திலுமிருந்து பெறக் கூடிய இன்பம், நிலையற்றது. பரமாத்ம சுகமே சுகம். அதுவே அழிவற்ற, நித்தியப் பொருள். அதை அடைவதே பேரின்பம்; மற்றது சிற்றின்பம். இன்பம் விஷய வஸ்துக்களில் இல்லை. இன்பம் ஆத்துமாவிலேதான் உண்டு விஷய சுகமே சுகம் என்று மயங்கி நாம் புலன்களுக்கு அடிமையாகிறோம்.

''நாயானது எலும்பைக் கடித்துக்கொண்டிருக் கும்போது, அதனுடைய வாயிலிருந்து சொட்டும் ரத்தத்தை அந்த எலும்பின் ரத்தமென மயங்கு கிறது. அச்சமயம் நாம் கண்டு விட்டால் தன்னிட மிருக்கும் எலும்பைப் பறிப்பார்களோ என்று பயந்து அதைக் கௌவிக் கொண்டு ஓடிவிடுகிறது. அப்படித்தான் மனிதன் வறட்டாசை பற்றிக் கெடுகிறான்.'' இம்மாதிரியாக டாக்டர் அரிய போதனைகளையும், நீதிகளையும் அடிக்கடி எடுத்துச் சொல்லுவார்.

அன்பினால் கோபத்தையும் உதார குணத்தால் பேராசையையும், மனோசுத்தியினால் காமத்தையும், இறைவனிடம் சரணாகதியினால் அகங்காரத்தையும், நன்மையினால் தீமையையும், தைரியத்தால் பயத் தையும் அன்று வென்ற இம்மகான் இன்று உல கெங்கும் சிவானந்த அருள் ஜோதியாக விளங்குகிறார்.

---

## அத்தியாயம் – 6.

## பிரிவு

நமது டாக்டர் எல்லோருக்கும் நண்பர். இவருடைய நண்பர்களில் யாழ்ப்பாணத்தார்கள்

அதிகம். அங்கு எந்த நிலையங்களிலும் இவர்களே பெரும்பாலும் இருந்தார்கள். சீனர்கள், மலாய்க் காரர்கள், நம் தமிழ் நாட்டார்கள் எல்லாருக்கும் இவர் ஆப்த நண்பராக விளங்கினார். கடல் கடந்து வந்த ஒரு தமிழர் அன்னிய நாட்டில் இவ்வளவு பேர்களுக்கும் நண்பராயிருப்பது அதிசயமே. இவர் மலாய், சீன பாஷைகள் நன்றாய் பேசுவார். என்னை இவர் ஆபீஸுக்கு அழைத்துச் சென்று டைப்பு (Type) அடிக்கக் கற்றுக் கொடுத்தார்.

''ஜோகூர் பாரோ'' என்பது சிறிய ஊர். ஓர் முகமதிய அரசன் அவ்வூரை ஆண்டு வந்தான். தபால் தலைகளிலும், கார்டுகளிலும் அந்த அரசனின் தலையைத்தான் போட்டிருக்கும். அவ்வூருக்கு வரும் கடிதங்களைக் கையெழுத்து இட்டுத்தான் பெறவேண்டும்.

இவருக்கு யாராவது கடிதம் எழுதினால் உடனே பதில் எழுதித் தாமே தபாலில் சேர்த்து வருவார். பிறரிடம் கொடுத்து தபால் பெட்டியில் போடச் சொல்லும் பழக்கம் கிடையாது ''ஏன், தாங்களே எழுதித் தாங்களே தபால் பெட்டியில் போட்டு வருகிறீர்கள்'' என்று கேட்டால், ''நேரில் பார்க்க முடியாததால் ஒருவன் கடிதம் எழுதுகிறான்; அந்தக் கடிதத்திற்கு நாமே பதில் எழுதி நாமே தபாலில் சேர்த்தால் அந்த அன்பர் கையில் நேரில் கொடுப்பதற்கு ஒப்பாகும்; இருவர் மனமும் பொருந்தும்; அன்புடன் அன்புறையும்'' என்று அன்பு ததும்பக் கூறுவார்.

கடைகளில் சாமான்கள் ஏதாவது வாங்க வேண்டியிருந்தால் இவர் தாமே சென்று வாங்கு வார். கடைக்காரன் சொன்ன விலையை அப்படியே கொடுத்துவிடுவார். கூலியை வைத்தால் அவன்

கஷ்டத்துக்கு ஆளாவதைக் கண்டு சகியாதவராய் தாமே சுமந்து வருவார். ஒருநாள் ''நான்கூட வருகிறேன்'' என்றேன். ''வாருங்கள்'' என்றார். கடையில் வாங்கும் சாமான்களுக்குச் சொன்ன விலையைக் கொடுத்தார். அப்பொழுது நான் ''கடைக்காரன் சொல்லும் விலையை அப்படியே கொடுத்து விடுகிறீர்களே! அப்படிக் கொடுக்கலாமா?'' என்றேன். அவர் ''கடைக்காரன் ஆட்களைப் பார்த்துத்தான் விலை கூறுவார். ஒருதரம் அவன் சொன்ன விலையைக் கொடுத்துவிட்டால் பிறகு அவன் நம்மிடம் அதிக விலை சொல்லமாட்டான். இது நான் நேரில் அனுபவித்திருக்கிறேன்'' என்றார்.

இவர் வேதாந்தியென்றால் அதில் நன்றாய் ஆராய்ச்சி செய்தவர். சித்தாந்தியென்றால் அதிலும் அப்படியே—சைவ, வைஷ்ணவ பேதங்களைச் சமரசப் படுத்தும் சமர்த்தர். கர்ம, பக்தி, ஞான யோக முறைகளை ஆராய்ந்த புலவர். இவர் கிரீன்துரை போன்ற வெள்ளைக்காரரிடம் வேலை பார்த்தார். உத்தியோகத்திற்கு ஏற்றபடி ஐரோப்பிய மோஸ்தரில் உடையணிவார். இங்கிலாந்திலிருந்து பட்டம் பெற்றவர்—என்றாலும் அனாசாரங்களுக்கு அடிமையாகாமல் தமக்குரிய சுதர்மத்தையும், வைதீக கர்மங்களையும் நித்யானுஷ்டானங்களையும், நிறைவேற்றி வந்தார். எல்லோருக்கும் இனிமையாக நடந்ததால் இவரை அங்குள்ள அனைவரும் விரும்பினர். இன்று உலகமே விரும்புகிறது.

## இலங்கை சென்றேன்

இந்த வள்ளலிடமிருந்து நான் சிலநாள் பிரிந்திருக்க நேர்ந்தது. நான் இலங்கை செல்ல புறப்பட்டேன். இவர் முதலில் தடுத்தார். பிறகு விடை கொடுத்தார். அப்போது என்னிடம் இரண்டு

கவர்களைத் தந்தார்—ஒன்றில் கடிதம், மற்றொன்றில் என் வழிச்செலவுக்காக 64 வெள்ளி. நான் வியந்து போனேன்; இலங்கைக்கு அந்த நாளில் கப்பற் கூலி 30 வெள்ளியே. பின் ஏன் இவர் 64 வெள்ளி தந்தார். அதன் பொருள் என்ன என்று சிந்தித்தேன். டாக்டர் நமக்கு அறுபத்திநான்கு கலையறிவைத் தந்திருக்கிறார் என்று ஊகித்தேன். அடுத்த கவரைப் பிரித்தேன். அதில் அன்பு ததும்பும் கடிதம் ஒன்று இருக்கக்கண்டேன். அக்கடிதம் அடியில் வருமாறு:—

ஜோகூர் பாரோ
6—7—1922

மகா—ா—ா—ஸ்ரீ

எனது அருமை நரஸிம்மய்யருக்கு,

தாங்கள் தற்சமயம் செய்த உதவியை நான் எந் நாளும் மறக்கமாட்டேன். தாங்கள் போகுமிடங் களில் ஸ்ரீ நரஸிம்மமூர்த்தி அனுக்கிரகம் புரிவாராக!

தாங்கள் எவ்விடத்திலும் தெய்வ பக்தியோடும் ஏக பத்னி விரதத்தோடும் இருப்பீர்களென்று நான் பூர்ணமாய் நம்புகிறேன்.

இங்ஙனம்
தங்கள் அன்பன்
பி. வீ. குப்புசுவாமி

இதைப் படித்ததும் என்னுள்ளிருந்து தாங் கொணாத ஓர் பெருந்துக்கம் வந்து தொண்டையை அடைத்துக்கொண்டது. இனி எப்பொழுது இம்

மகானுபாவரைக் காணப்போகிறோமென்று ஏங்கி மனங்கலங்கினேன். கண்ணீர் விட்டு விம்மினேன். இவருடைய அன்பு என்னும் பாசத்தில் என் மனக் குரங்கு கட்டுண்டது. இவரது உத்தம குணங்களை நினைந்து நினைந்து உருகினேன் — தாய் போன்ற கருணை! தமயன் போன்ற உதவி! தத்துவ இரகசியங்களைச் சொல்லி என் மனந்தெளியச் செய்த இந்தப் பரம குருவை எப்படிப் பிரிவது என்று தயங்கித் தவித்தேன்.

டாக்டர் திடீரென அங்கே தோன்றினார்; அழுத கண்ணும் சிந்திய மூக்குமாயிருந்த எனது நிலையை அறிந்து கொண்டார்; உள்ளங்கை நெல்லிக்கனி போல் என் மனதை உணர்ந்தார். ''ஏன் வீணில் கவலைப்படுகிறீர்? நாம் இத்துடன் பிரிந்து விட்டதாகக் கருதி வருந்த வேண்டாம். இதைவிட மகோன்னதமான ஞான பூமியில் கூடுவோம். நாம் ஜன்மம் எடுத்தது எதற்காக? உலகிற்கு மேலான ஞானத்தைப் புகட்டத்தானே. ஸ்ரீ சங்கரரின் உபதேசத்தைக் கேளும்—பிறவியில் மானிடப் பிறவி அரிது. அதிலும் ஆணாகப் பிறப்பது அரிது. அதிலும் வேதாத்தியயனம் செய்து சாஸ்திர ஞானம் பெறுவதரிது. அதிலும் ஆத்மா, அனாத்மா இன்னதென்று பகுத்தறிதல் அரிது; அதிலும் ஆத்மானுபவம் பெறுதல் அரிது. பல பிறவிகளில் செய்த புண்ணிய பலனாலேதான் இது கிடைக்கும். இவ்வளவு அருமையான மனித ஜென்மமெடுத்தும், ஆணாய்ப் பிறந்தும், தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் ஆகிய நான்கு புருஷார்த்தங்களையும் அடையாதவன் அதமனாகிறான். இறைவனை அடைவதே பிறவிப் பயன். இதன் உட்கருத்து சில நாளில் வெளியாகும்'' என்று கூறி என்னை சமாதானப்படுத்தினார்.

அன்று மாலை நேரத்திற்கு முன்னதாகவே சிற்றுண்டி அருந்தினோம். குவாலாலம்பூரிலிருந்து ரயில் மாலை நாலரை மணிக்கு ஜோகூர் பாரோ வரும். இங்கே இறங்கி ஒரு சிறிய கப்பலில் ஏறி 4—5 மைல் கடல் கடக்க வேண்டும்.

இந்தக் கப்பலில் சென்றால் அரைமணி நேரத்தில் அக்கரை சேரலாம். அங்கு தயாராக இருக்கிற ரயிலில் ஏறி மாலை 6 மணி சுமாருக்கு சிங்கப்பூர் சேரலாம். வரும்போதும் இப்படியேதான்.

நான் இருக்குமிடம் அவர் வேலையாள் வந்து பெட்டி படுக்கைகளை எடுத்துக்கொண்டான். இவரும் இவர் ஆபீஸ் மானேஜர் ராஜம் பி. ஏ. யும் என் கூடவே புறப்பட்டார்கள். ஸ்ரீ ராஜம் சைவ மதத்தைச் சேர்ந்தவர். சிறிது காலம் கிருஸ்துவ மதத்திலிருந்தார். ஆனால் நம் வேத சாஸ்திரங்களை நம்புகிறவர். மிகவும் சாந்த சீலர். மகாமேருவைச் சேர்ந்த காகமும் பொன்னிரமாவதேபோல் நம் டாக்டர் குப்புசுவாமியிடம் வந்த எவரும் சற்குண சீலராகி விடுவார்கள்! பலதரப்பட்ட ஜீவநதிகள் அனைத்தும் கடலில் கலந்ததுமே தங்கள் நாம ரூபங்களற்று கடல் எனப் பெயர் கொள்வதுபோல், நம் டாக்டர் தம்மிடம் வந்த யாரையும் தாமாக்கும் ஆத்ம சக்தி பெற்றவராயிருந்தார்.

நாங்கள் வேலையாள் உள்பட நால்வருமாகத் துறைமுகம் சென்றோம். டாக்டர் எனக்கு இரண்டாம் வகுப்பு டிக்கெட்டு கொடுத்தார். அதை முன்பே வாங்கி வைத்திருந்தார். மானேஜர் ஸ்ரீ ராஜம் ஸீஸன் டிக்கெட்டு வாங்கியிருந்தார். இவர் ஜாகை சிங்கப்பூரில். தினமும் ரயிலில் ஜோகூர்க்குக் காலையில் வருவதும் மாலையில் போவதும் வழக்கம். நானும் ஸ்ரீ ராஜமும் கப்பலில்

சென்று உட்கார்ந்தோம். சிறிது நேரத்தில் கப்பல் புறப்படும் அறிகுறிகள் காணப்பட்டன. இவர் என்னிடம் ஏதோ கூற முயன்றார். ''இராமரைப் பிரியும் பரதன்'' போல நான் துக்கக் கடலில் மூழ்கினேன். இவரைப் பிரிய என்றால் முடியவில்லை. இவர் என்னிடம் ''தாங்கள் எவ்விடம் சென்றாலும் கடிதம் எழுதுங்கள்'' என்று கூறி முடிப்பதற்குள் கப்பலும் இவரிடம் அனுமதி பெறுவதுபோல் ஊதிக்கொண்டு புறப்பட்டது. ''பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ?'' என்ற பழமொழிக்கு மாறாக ''கூடியவர் பிரிந்தால் கூறவும் வேண்டுமோ?'' என்றுணர்ந்தேன். கப்பல் புறப்பட்டது. டாக்டர் குப்புசுவாமியும் எங்களைப் பிரிந்து சென்று விட்டார். நான் அச்சமயம் அடைந்த பிரிவுத்துயரைப் பேசமுடியுமா? எழுத முடியுமா?

ஸ்ரீ ராஜம் என் ஏக்கம் தீங்க ஆறுதல் கூறினார். ''ஐயா சுவாமிகளே! மனிதன் எதிலும் அதிகமாய் ஆசை வைக்கலாகாது. அதிக ஆசை அத்தனையும் துன்பம் என்பார்.''

''ஆசையறுமின்கள், ஆசையறுமின்கள்
ஈசனோடாயினும், ஆசையறுமின்கள்
ஆசைப்படப்பட ஆய்வருந்துன்பங்கள்
ஆசைவிடவிட ஆனந்தமாமே''

என்றார் திருமூலர். தாங்கள் படுந்துயரே இதற்கு அத்தாட்சி. எதிலும் அதிகப் பற்று கூடாது. நிதானமாக, ஆழமறிந்து, நோக்கமறிந்து, அறிவுடன் நடந்தால் உய்வுண்டு.'' இப்படிப் பேசிக் கொண்டே நாங்கள் சிங்கப்பூர் வந்து சேர்ந்தோம். நான் ஒரு மாதம் வரையில் சிங்கப்பூரில் தங்கும்படி நேரிட்டது. அப்பொழுது தினமும் மாலையில்

உலாவச் செல்லும்போது ஸ்ரீ ராஜம் ஜாகைக்குச் சென்று சிறிது நேரம் உரையாடி வருவதுண்டு.

ஒரு நாள் டாக்டர் குப்புசுவாமி செய்ய வேண்டிய சிரார்த்தம் வந்தது. சிங்கப்பூர் டாக்டர் ரெகுராத ஐயருக்கு, ''காலையில் இரண்டு பிராமணர்களுடன் உபாத்தியாயரை ஜோகூர் பாரோவுக்கு வரும்படி'' போன் மூலமாய் டாக்டர் குப்புசுவாமி அறிவித்தார். டாக்டர் ரெகுநாத ஐயர் அவ்விடமுள்ள உபாத்தியாரிடம் சொல்லிவிட்டார். உபாத்தியாயர் அவ்விடங்களில் எங்கு தேடியும் பிரா்மணர்கள் கிடைக்காமல் கடைசியில் என்னிடம் வந்தார். ''டாக்டர் குப்புசுவாமி ஐயர் வீட்டில் சிரார்த்தம்; தாங்கள் பிராமணார்த்தம் இருக்க வேண்டும்,'' என்றழைத்தார். எனக்கு எங்கும் நிமிந்தரணம் இருந்து வழக்கமில்லை; எனினும் நமது டாக்டர் என்றதும் ஏற்றுக் கொண்டேன். மறுநாள் காலையில் புறப்பட்டு ஜோகூர் போய்ச் சேர்ந்தோம்.

டாக்டர் ஜாகை துறைமுகத்திலிருந்து பார்த்தால் நன்ருய்த் தெரியும். நாங்கள் கப்பலிலிருந்து இறங்கி வந்தபோது இவர் எங்கள் வரவை எதிர் பார்த்து இருந்தார். ஆனால் நான் வருவேன் என்பது இவருக்குத் தெரியாது. எங்களைக் கண்டதும் க்ஷேமம் விசாரித்து பிறகு ''இன்று சிரார்த்தம் நடத்த ஒரு சிறு இடையூறு ஏற்பட்டது; அதாவது இவ்விடம் சமயல் செய்பவருக்கு ஒரு தீட்டு வந்துவிட்டபடியால், இரண்ய சிரார்த்தமாகச் செய்து உங்களை இப்பொழுதே சிங்கப்பூருக்கு அனுப்பிவிடுகிறேன்; தாங்கள் அலைச்சலுக்கு மன்னிக்கவும்'' என்றார்.

நான்:— ''நாங்கள் இருவர் வந்திருக்கிறோமே? தங்களுக்கு ஏன் கவலை; ஒரு மணி நேரத்தில் சமயல் செய்து முடித்துவிடுகிறோம். தாங்கள் எதற்காக இரண்ய சிரார்த்தம் செய்யவேண்டும்?'' என்றேன்.

இதைக் கேட்டு மிகவும் களிப்படைந்து, அவர், ''இதையறிந்துதான் பகவான் தங்களை அனுப்பி இருக்கிறார் போலும்?'' என்று கூறினார்.

புரோகிதரும் நானும் சமைக்கத் தொடங்கி சிறிது நேரத்தில் எல்லாம் தயாராக்கிவிட்டோம். பிறகு சிரார்த்தம் நடந்தேறியது. எங்கும் தட்சிணை இரண்டு ரூபாய் அல்லது இரண்டு வெள்ளியே தருவதுண்டு; ஆனால் நம் டாக்டர் குப்புசுவாமி பத்து வெள்ளியை தட்சிணையாக வைத்தபோது எனக்கு அதி ஆச்சரியமாயிருந்தது. நாங்கள் செல்லும்போது எங்கள் வழிச் செலவுக்கு ஐந்து வெள்ளி வீதம் கொடுத்து எங்களை வந்தனத்துடன் அனுப்பிவைத்தார். நாங்கள் ''இவர் என்ன, பணத்தை பணமெனக் கருதியிருக்கிறாரா? அல்லது ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் பணத்தை மண், கல், ஓடு எனக் கருதியதுபோல் இவரும் எண்ணி இருக்கிறாரா? கொடுப்பதிலும் ஓர் நியதியுண்டல்லவா? இவர் எல்லாவற்றையும் கடந்து விட்டவராக அன்றோ தோன்றுகிறார். சிலர் வாய் வேதாந்தம் பேசுவர். காகத்துக்குக் கூட எச்சில் கையை உதற மாட்டார்கள்; இவரோவெனில் உள்ளும் புறமும் கருணைமயமாயிருக்கிறார்,'' எனப் பேசிக்கொண்டோம்.

ஜான் என்பவர் ஏசுநாதரின் சிஷ்யர்களில் முக்கியமானவர். இவர் தன் குருவைப் பற்றிப் பல நூல்கள் எழுதியிருக்கிறார். இவரிடம் ஏசுநாதருக்குத் தனிப்பட்ட பிரியமுண்டு; காரணம் தன் உபதேசப்படி நடந்துவந்ததினால்தான். ஒருநாள் பார்ஸி ஜாதியார் ஒருவர் இந்த ஜான் என்ற சிஷ்யரிடம், ''உங்கள் குருநாதன் எல்லா ஜாதி ஜனங்களுடன் கூடவே பந்தியிலிருந்து சாப்பிடுகிறாரே'' என்று கேட்டார். இவர் கேட்டது ஏசுநாதரின் செவிகளில் விழுந்து விட்டது. உடனே

அந்த பார்ஸியை ஏசுநாதர் அன்புடன் அழைத்து, ''அன்பரே, சரீரம் திடமுள்ளவர்க்கு வைத்தியர் வேண்டியதில்லை. நோயுள்ளவர்க்கே வைத்தியம் கட்டாயம் வேண்டும். நான் புண்ணியம் செய்தவர் களுடன் பழகவில்லை. பாபிகளைத் திருத்துவதே என் வேலை'' என்ருர். அதுபோலவே டாக்டர் குப்புசுவாமியும், ஏழை எளியவர்களையும், நோயுள்ளவர்களையும் கண்டால் அவர்களுக்குப் பணிவிடை செய்து நன்மொழிகள் கூறி ஆறுதலளிப் பார். இப்படியுள்ள ஒரு மகாபுருஷரை விட்டுப் பிரிவதென்ருல் எனக்கு மிகவும் வருத்தமாகவே இருந்தது. எப்படியோ ஜோகூரிலிருந்து புறப்பட்டு சிங்கப்பூர் வந்து சேர்ந்தோம். நான் சிங்கப்பூரி லிருந்து கப்பல் ஏறி ஏழாம் நாள் கொழும்பு வந்து சேர்ந்து அவ்விடமிருந்து யாழ்ப்பாணம் சென்று, இவருக்கு ஓர் கடிதம் அனுப்பினேன். மாதம் இரண்டு கடிதங்கள் எனக்கு இவரிடமிருந்து வந்து கொண்டிருக்கும்.

---

## அத்தியாயம் – 7.

### கதிர்காமத்தின் மகிமை

இவரை விட்டுப் பிரிந்து சிலோனில் யாழ்ப் பாணத்தில் இருந்தபொழுது இவரிடமிருந்து வந்த கடிதமொன்றில் ''அவசியம் கதிர்காம தரிசனம் செய்யவேண்டும்'' என்று எழுதியிருந்தார். அதன்படியே யாழ்ப்பாணத்திலிருந்து புறப்பட் டேன். கதிர்காம உத்ஸவம் 15 தினம். ஆடி மீ பௌர்ணமி அன்று கடைசி நாள் தீர்த்தோத்ஸவம். கதிர்காமத்திற்குச் செல்லும் யாத்திரீகர்களுக்கு ரயிலில் போகவர இலங்கை எங்கும் பதினைந்து நாள் ஒரே கட்டணமே.

நான் புறப்பட்டு கொழும்பு போய் வண்டி மாறி மாத்தளையில் இறங்கினேன். பிறகு மோட்டாரில் செல்ல வேணடும். மாத்தளை ஸ்டேஷனில் நாட்டுக்கோட்டை செட்டியார்களின் மோட்டார், பஸ்கள் ஏராளமாய் வந்து நிற்கும். அடியார் ''கதிர்காமத்தப்பனுக்கு ஹரோஹரா'' என்று கோஷிப்பார்; அவ்விடமுள்ளோர் அனைவரும் ''ஹரோஹரா'' என்று திசையதிர கூவுவர்; அதைக் கேட்டால் புளகாங்கிதமாகும்; அவ்வளவு உருக்கமாயும், பக்தியுடனும், நாமாவளி தொனிக்கும்; செட்டியார்கள் அன்பர்களை பஸ்ஸில் ஏற்றி நெருக்கடியின்றி அமர்த்தி மிகவும் உபசாரத்துடனும், மரியாதையுடனும் நகரத்தார் சத்திரத்திற்கு அழைத்து வருவார்கள். அவ்வாறே நாங்களும் அன்று இரவு 8 மணிக்கு வந்து சத்திரத்தில் இறங்கினோம். இது வசதியான இடம். தனியாக வந்தவர் சமாராதனையில் சாப்பிடலாம். குடும்பஸ்தர்களானால் அவர்களுக்குத் தனி ஜாகை, பாத்திரங்கள், சாமான்கள் முதலியவை கொடுக்கப்படும். அவர்கள் சமையல் செய்து சாப்பிடலாம். அதற்கு வேண்டிய சாமான்களும் கிடைக்கும். அங்கே பசுமாடுகள் ஏராளம். வேண்டிய பால் கிடைக்கும். இரவு நித்திரை செய்வதற்கு பாய், தலையணை, தனித்தனியாக ஒவ்வொருவருக்கும் கொடுக்கப்படும்.

அங்கிருந்து 75 மைல் உள்ள ''தசமாரா'' என்ற இடத்துக்கு மோட்டார் பஸ் போகிறது. நான் அதில் ஏறி பகல் சுமார் ஒரு மணிக்கு அங்கு சென்றேன். இவ்விடமிருந்து பத்து மைல் கதிர் காமம். நடந்துதான் செல்லவேண்டும். வழியில் மேடு பள்ளம் அதிகம். மாலை சுமார் 6 மணிக்குக் கதிர்காமம் அடைந்தேன். மாணிக்க கங்கை என்ற நதியைக் கடந்து மேலே சென்றால் ஸ்ரீ முருகன்

ஆலயம் காட்சியளிக்கும். ஆலய வாயிலில் நாலு தூண்கள் எழுப்பப்பட்டிருக்கின்றன. அதில் தழைகளைப் பந்தலாகப் போடுகிறார்கள். இதுவே அவ்வூர் ஐதீகமாம்.

மாணிக்க விநாயகர், பைரவர், ஸ்ரீ முருகன் ஆகிய மூன்று ஆலயங்களும் ஒரே வளைவில் சேர்ந்தாற்போல் இருக்கின்றன. விநாயகர் ஆலயம் சிறிது முருகன் ஸந்நிதிக்கு வலதுபுறம். தெய்வயானை அம்மன் ஸந்நிதி தனி வளைவில் உள்ளது. வள்ளியம்மை ஸந்நிதி முருகன் ஸந்நிதிக்கு நேர் எதிரே ஒரு பர்லாங்கு தூரத்தில் இருக்கிறது. பைரவர் ஸந்நிதி தவிர மற்றெல்லா ஸந்நிதிகளும் திரைகளால் மூடப்பட்டிருக்கின்றன. அத்திரைகளில் அந்தந்த ஸந்நிதியிலுள்ள உருவம் வரையப்பட்டிருக்கிறது.

14-ம் நாள் இரவு 7 மணிக்கு சூரஸம்ஹாரம். அது முடிந்ததும் ஸ்ரீ வள்ளியம்மை ஆலயத்திற்கு ஸ்ரீ முருகன் எழுந்தருளுவார். இரவு இரண்டு மணிக்குத்தான் திரும்பி மூலஸ்தானம் சேர்வார். சூரஸம்ஹாரம் முடிந்து முருகன் வள்ளியம்மை ஆலயத்திற்குச் சென்றதும் தெய்வயானை அம்மன் ஆலயம் திறக்கப்படும். அச்சமயம் தெய்வயானை அம்மன் இடையில் காவியுடையும், கழுத்தில் உருத்திராக்ஷமாலையும், கையில் ஜபமாலையும், நெற்றியிலும், மேனியிலும் விபூதியும், அணிந்து கொண்டு கலியுக வரதன் ஸ்ரீ முருக பிரானைக் குறித்துத் தவம் புரிகிறாள். அக்காட்சி மனதை உருக்கும். ஸ்ரீ முருகன் ஆலயத்திற்கு இரவு இரண்டு மணிக்கு எழுந்தருளியதும் தெய்வயானை அம்மன் ஸந்நிதி திரையிடப்படும். அந்த ஸந்நிதியிலும் மூலஸ்தானத்தைக் காண இயலாது.

சூரன் மலை, கதிரை மலை, விபூதி மலை, செல்வக் கதிர்காமம் ஆகிய இடங்கள் பார்க்கத்தக்கவை. செல்வக் கதிர்காமத்திலேதான் முருகன் விரும்பியபடி விநாயகர் யானையாக வந்தார். வள்ளி, யானைக்கு அஞ்சி முருகனை அணைந்தாள். பிள்ளையார் பூஜையுடனேதான் சுபகாரியங்கள் தொடங்குமல்லவா? அதனாலேதான் வள்ளி—முருகன் திருமணத்திற்கு முன்பு விநாயகர் எழுந்தருளினர்.

## கற்பூரக் காட்சி

இரவு முருக யந்திரம் அடங்கிய பெட்டி யானை மேல் பவனி வரும். அதை அணிமணிகளால் அலங்கரித்து, பட்டும் சரிகையும் சுற்றி, பூவணி செய்து, பொன்—முத்துக் குடை தாங்க எடுத்துச் செல்வர். ஆலயத்தைச் சேர்ந்த ஒருவர் அங்கி அணிந்து, தலைக் கட்டுடன், வாயைத் துணியால் கட்டிக்கொண்டு வருவார். அவர் தலைமேல் அப்பெட்டியை வைத்து வெளியே இருக்கும் அலங்கார மண்டபத்தில் அலங்காரமாக நிற்கும் யானைமேல் வைக்கச் செய்வர். அவர் அப்பெட்டியை நன்றாக பிடித்துக்கொள்வார். அங்கே அன்பர் வெண் சாமரம், மயில் விசிறி போட்டு பூச்சக்ரவாகக் குடை பிடிப்பர். எங்கும் ''ஹரோஹரா! கதிர்காமத் தப்பனுக்கு ஹரோஹரா!'' என்ற குரலைக் கேட்கலாம். இரவு சுமார் 7 மணிக்கு ஸ்ரீ முருகன் பவனி ஆரம்பமாகும். இரவு இரண்டு மணிக்குத்தான் ஸ்ரீ முருகன் ஆலயத்திற்குத் திரும்புவார். இதில் ஓர் விசேஷம்; எத்தலத்திலுமில்லாக் காட்சி ஒன்றுண்டு.

விபூதி மலையிலிருந்து சிறிது ஈர விபூதியைக் கொண்டு வந்து உலர வைத்து வஸ்திரகாயம்

பண்ணி அதை அகன்ற பாத்திரம் அல்லது மண் சட்டியில் நிறைத்து அதன்மேல் கற்பூரத்தை வைத்துச் சுடர் கொளுத்துவார்கள். இந்த தீபத்தைச் சிரத்தின்மேல் வைத்துப் பிடித்துக் கொண்டும், கற்பூரம் அணையாமல் போட்டுக் கொண்டும் பவனி செல்வார்கள்.

இக் கற்பூர தீபக்காட்சி கண்கொள்ளாக் காட்சியாயிருக்கும். உலகில் உண்டாகும் கற்பூரமெல்லாம் கதிர்காமத்திற்கே போதுமா! என்று தோன்றும். கற்பூரத்தையே கதிர்காம வேலனுக்கு அன்பர்கள் அர்ப்பணிக்கிறார்கள். முருகன் யானையின்மீது அமர்ந்து அசைந்தசைந்து வருவதும் முருக நாம முழக்கமும், அன்பர் ஆர்வமும், மெய் சிலிர்க்கும். மனமும் முருகனிடம் லயமாய்விடும். இக்காட்சியை நேரில் கண்டதே பெரும் பாக்கியமாகும். 15-ம் தினம் தீர்த்தம்; காலை 10 மணிக்குள் முடிந்துவிடும். அடியார்கள் உடனே புறப்பட்டுவிடுவார்கள்.

## மார்க்கண்டரின் தொண்டு

தசமாராவுக்கும், கதிர்காமத்திற்கும் நடுவே பெரிய காடு; தண்ணீர் தொலைவில் இருக்கிறது. பக்த சேவையில் ஈடுபட்ட, ''ஸ்ரீ மார்க்கண்டர்'' என்ற வள்ளல் கதிர்காம வேலன்பால் தன் உடல், பொருள், ஆவி மூன்றையும் அர்ப்பணம் செய்தார். அவர் அன்ன சத்திரம் வைத்தார். உத்ஸவ காலத்தில், கதிர்காமத்தில் இந்த சத்திரத்தில் எல்லோருக்கும் திருப்தியாக உணவு கிடைக்கும். காட்டின் நடுவில் இவர் ஓர் தண்ணீர்ப் பந்தல் வைத்திருக்கிறார். இந்த ஏற்பாடு மிகவும் குறிப்பிடத்தக்கது.

சாதாரணத் தண்ணீர் பந்தலில் யாத்திரீகர் களுக்குக் குளிர்ந்த தண்ணீர் மட்டும்தான் கொடுக் கப்படும். ஆனுல் இங்கே பானகம், இளநீர், நீர் மோர், தண்ணீர் முதலியவைகள் கொடுக்கப்படும். இவைகள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனிப் பந்த லுண்டு. தயிர்ச்சட்டிகள் கணக்கின்றி வரும். எலுமிச்சம் பழம், இஞ்சி, கருவேப்பிலே, உப்பு இவைகளேக் கொண்டு நீர்மோரைப் பக்குவப்படுத்தி யிருந்தார்கள். இளநீர் மலேயாகக் குவிந்து கிடந்தது; குளிர்ந்த தண்ணீரோ விலாமிச்சவேர் முதலியவை கலந்து இருந்தது. பானகமோ அமிர்தத்துக்கு ஒப்பாயிருந்தது. அங்குள்ள பணி யாளர்கள் தாகசாந்தி செய்ய வருவோரை ''ஹரோஹரா'' என்று போட்டி போட்டு அழைப்பார்கள். அன்பாக உபசரித்து இனிய பானங்களே நிரம்பத் தருவார்கள். அவ்வளவு மேலான முறையில் ஏற்பாடுகள் செய்யப்பட்டதா யிருந்தது. நானும் அவ்வாறே தாகந்தணிந்து மார்க்கண்டேயரின் மேலான ஈகையை வாழ்த்தினேன்.

அவ்விடமிருந்து புறப்பட்டு ''தசமாரா'' வந்து பஸ் ஏறி இரவு மாத்தளே வந்து சேர்ந்தேன். மறு நாள் காலே ரயில் ஏறிக் கொழும்பு வந்து வண்டி மாறி யாழ்ப்பாணம் வந்து சேர்ந்தேன். டாக்டர் குப்புசுவாமிக்குப் பிரசாதமும் கதிர்காம தரிசன விவரம் அடங்கிய கடிதமும் அனுப்பினேன். பதினேந்தாம் தினம் பதில் வந்தது. நான் டாக்டர் குப்புசுவாமியைப் பிரிந்த பிறகு ''அடடா! அவர் படத்தை வாங்கிவர மறந்துவிட்டோமே'' என்ற நினைவு வந்தது. ஒரு கடிதத்தில் அவர் படம் அனுப்பும்படி எழுதியதும், மறு தபாலில் டாக்டரும் நண்பர் ஸ்ரீ சுப்பிரமணிய அய்யரும் மேல் நாட்டு உடையுடன் நின்று கொண்டிருக்கும் மாதிரியில் ஒரு

படம் வந்து சேர்ந்தது. அதைக் காணும்போதெல்லாம் அவரை நேரில் பார்ப்பதுபோலும், பேசுவதுபோலும் எனக்குத் தோன்றும்.

## அன்பு ததும்பும் ஒரு கடிதம்

அடியிற் காணும் கடிதம் அன்புப் பெருக்கால் என் மனம் என்னைத் தூண்ட முன்னொரு காலத்தில் நான் எழுதியது. இதில் இலக்கண இலக்கியம், எதுகை மோனைகள் காணமாட்டா. இதில் பிழைகளிருக்கும். எனினும் இதிலுள்ள மொழிகளை அன்பு மொழியாக ஏற்றுக்கொள்ளும்படி மிகவும் தாழ்மையுடன் வேண்டுகிறேன்.

இது டாக்டர் குப்புசுவாமி அவர்களுக்கு நான் இலங்கையிலிருந்தபோது எழுதிய கடிதங்களில் ஒன்று. ''யார், யாருக்கு, எப்பொழுது, என்ன எழுதப்பட்டது?'' என்பது இதன்மூலமாய் விளங்கும்.

யாழ்ப்பாணம், 8–9–1922

''யார் வேண்டுகோள்?''

அருட்பெருங் கடவுளாய் அன்பருக்கன்பனாய்
ஆதிசேடன் மார்பினில் அன்புடனமர்ந்த
பிரும்மனின் தந்தையாய் பதுமனுபனாய்
பக்தர்கள் புகழ்மொழி பலமுறை கூறும்
அனந்த சயனத்தே அரசனின் அன்பனும்
பதுமனுபனின் புதல்வனாய் வந்து
தன்குலதெய்வ நாமமே விளங்க
நரஸிம்மன் இன்று நன்றியோடு
தங்களுக்கனுப்பும் கடிதமிதனை
நலமுடனீவீர் நன்குபெறுவீரே.

''யாருக்கு வேண்டுகோள்?''

பாரத பூமியிலே பாண்டி நாட்டிலே
திருநெல்வேலி ஜில்லாதனிலே
பத்துமைல் தூரத்திலே பத்தமடைதனிலே
அப்பையர் குலத்திலே தப்பாமல் தோன்றிய
பங்கமொன்றில்லா வெங்கு அய்யர்
குமரனாய் வந்து அவதாரம் செய்தீர்.
குலகுரு மகிமை யாவையும் பெற்று
வையகத்தோர்க்கு ஞான வைத்தியராய்
நோய்கள் யாவும் நொடியில் விலகத்
தொழிலது புரிந்து துலங்கின நாளில்
அலை கடல் சூழும் அயல் நாடான
சிங்கை நகரும் செல்ல நினைத்தீர்.
அங்கும் சென்று அமர்ந்தது மன்றி
ஓங்காரத் தொனியை ஒழுங்காய்ப் பரப்பி
மங்கா நோய்களை மாயமாயொழித்தீர்.
ஜோஹூர் தன்னில் சுசித்து வாழும்
குணப் பெருங் குன்றே குப்புசுவாமி! என்
ஜனன மரண பாதையைச் சடிதி
நீக்கு மீசனே நீவீர் எம்மை
நிலைத்த ஞானம் தந்து காப்பீரே.

சொற் குற்றம் பொருட் குற்றம் முதலிய நிறைந்துள்ள இக்கடிதத்தை அவருக்கு அனுப்பினேன். அதற்கு எனக்குக் கிடைத்த விடை பின்வருமாறு:—

ஜோகூர் பாரோ, 16—9—1922

''யாழ்ப்பாணம் புலவர் தோன்றும் பூமி. அம் மண்ணின் விசேஷம் தங்களைக் கவியாக்குகின்றது. கூடிய சீக்கிரம் தாங்கள் நூல் எழுதக்கூடிய திறமையைப் பெறுவீர்கள்'' இவ்வாசி மொழியை அன்புடன் எழுதியிருந்தார்.

அது இப்பொழுது இம்மகானின் நூலையே எழுதும்படிச் செய்திருக்கிறது. அப்பொழுதே இவர் ''ஆத்ம சக்தி'' பெற்றிருந்தார். அதனுல் இப்பொழுது சிறிதும் ஆச்சரியமில்லை.

---

## அத்தியாயம் — 8.

## பிரிவுக்குப்பின் சந்திப்பு

டாக்டரிடமிருந்து இப்படியே சில நாள் கடிதம் வந்துகொண்டிருந்தது. ஒருநாள் கடிதம் வருவது நின்று விட்டது. இதன் காரணம் என்ன என்று தெரியவில்லை. என் மனதில் மீண்டும் இருள் இடம் பெற்றுவிட்டது. நாள் செல்லச் செல்ல இருள் பெருகிவர ஆரம்பித்தது. தந்திகளில்லா வீணை போலும், தாயில்லாக் குழவிபோலும் தவிக்கலானேன். யாரிடம் கேட்பது, என்ன செய்வது என யாதும் புலப்படவில்லை. ஆனுல் என் இதயத்தில் இவர் உருவம் அந்தர்முகமாய்க் காணுந்தோறும் மனம் சாந்தியடையும். ஆகிலும் பகிர்முகமாய் இவரைக் காணும் நாள் எந்நாளோ என்று ஏங்கித் தவித்துக் கொண்டிருந்தேன்.

பல வருடங்கள் பறந்து சென்றன. இவர் முற்றும் துறந்த முனிவரான பிறகு, 1935–ம் வருஷம் நான் சென்னை தம்புச் செட்டித் தெருவில் இருந்தபொழுது இவரைப் பற்றிய வரலாறுகளை ''மை மாகஸின்'' என்ற ஆங்கில மாதப் பத்திரிகை மூலமாக அறியலானேன். அச்சமயம் இவர் சுவர்க் காசிரமத்தில் இருந்தார். மலேயாவில் இவருடன் நான் இருந்த காலத்தைக் குறிப்பிட்டு இவருக்கு கடிதம் எழுதினேன். அவர் உடனே பதிலும் உபதேசமடங்கிய சிறிய புஸ்தகமும் அனுப்பினுர்.

அதைக்காணவும் திசையறியாமல் தவிக்கும் கப்பல் மாலுமி கலங்கரைவிளக்கத்தைக் கண்டதுபோல் ஆறுதலடைந்தேன். ரிஷிகேஷம் எப்பொழுது செல்லப்போகிறேமென்ற நினைவு என் மனதில் குடி கொண்டு என்னை அடிக்கடி தூண்டிற்று. ஒரு நதி மேடு, பள்ளம், காடு, மலைகளிற் பாய்ந்து தரையைக் கண்டவுடன் வேகம் குறைந்து சாந்தமாய்ச் சென்று கடல் சேர்வதுபோல் நானும் வாழ்க்கையில் பற்பல இடர்களையும் இன்னல்களையும் தாண்டி வந்தேன்.

1941-ம் வருஷம் பிப்ரவரி மாதம் நான் சென்னை மைலாப்பூரிலிருந்தபோது, திடீரென்று இவரைக் கண்டு வணங்க என்னில் ஓர் வைராக்கியம் எழுந்தது. உடனே யாரிடமும் சொல்லாமல் நேராகப் புறப்பட்டு கல்கத்தா, காசி, அயோத்தி முதலிய இடங்களில் தங்கி ஹரித்துவாரம் வந்தேன். அன்று அவ்விடம் ஸ்நானம், தரிசனம் முடித்துக் கொண்டு பஸ்ஸில் ஏறி மாலை 3 மணிக்கு ரிஷிகேஷம் வந்து, பின் ஆனந்தக் குடீரையடைந்தேன். அங்கு மாலை 5 மணிக்குத் தான் ஸ்ரீ சிவானந்த மகராஜைத் தரிசிக்கலாம் என்ருர்கள். அப்பொழுது அந்திப்பொழுது நெருங்கி வந்து கொண்டிருந்தது. கதிரவனும், ''தான் வருமளவும் உலகுக்கு சிவானந்த ஜோதி நிலவட்டும்'' என்று கூறிச் சென்றதுபோல மறைந்தான். நான் சிறிது நேரத்தில் பகிர்முகமாய்ப் பார்க்க வேண்டுமென்ற உருவத்தை—என் குருநாதரைக்—கண்டேன். என்ன ஆச்சரியம்! என்ன மாறுபாடு! என் கண்ணையே என்னுல் நம்ப முடியவில்லை. சிறிது நிலை தடுமாறினேன். காரணம் முன் பார்த்த உருவத்திற்கும், இப்பொழுது பார்க்கின்ற உருவத்திற்கும் உள்ள வித்தியாசமே. முன் பார்த்த உருவம் மேல் நாட்டு

உடையால் மறைந்திருந்தது. இப்பொழுது அந்த உருவம் காவியணிந்து ஜோதிஸ்வரூபத்துடன் பிரகாசித்தது. நான் காசியிலிருந்து வாங்கி வந்த கௌரீ சங்கரத்துடன் ஒரு உருத்திராக்ஷ மாலையை சுவாமிஜீகளுக்கு அர்ப்பணித்தேன். அதை அவர் அன்புடன் ஏற்று அணிந்து கொண்டார்.

நான் அவர் திருப்பாதம் பிடித்து, ''இவ் வேழைக்கு, முன் மலேயாவில் கொடுத்த வாக்கை தாங்கள் இப்போது நிறைவேற்ற வேண்டும்'' என்று வேண்டினேன். அவருக்கு முதலில் விஷயம் புரிய வில்லை. சிறிது ஆலோசனையில் ஆழ்ந்தார். நான் மெதுவாகப் பழைய நினைவுகளை ஞாபகப்படுத்தி னேன். உடனே அதை அறிந்து கொண்டு ஆனந்தத் துடன் எனது குடும்ப வரலாறுகளை எல்லாம் விசாரித்தார். பிறகு புன்னகையுடன் ''ஏன் அவசரப்படுகிறீர்கள்; இன்னும் சில காலம் சென்றால் எல்லாம் தானாகவே நடந்துவிடும்'' என்று கூறி சில தினங்கள் ஆனந்த குடீரில் தங்கும்படி கட்டளையிட்டார். அவ்வாறே செய்து வந்தேன்.

## ''சிவானந்தரின் அருள் சக்தி''

ஒரு நாள் நான் ஓர் அறையில் உட்கார்ந்து ஏதோ ஒரு புத்தகத்தைப் பார்த்துக்கொண்டிருந் தேன். அச்சமயம், ''தாங்கள் தேவப்பிரயாகை சென்று கங்கை நீராடி ஸ்ரீ ராம நவமி அன்று ஸ்ரீ ராம தரிசனம் பெற்று வாருங்கள்; தங்களுடன் ஒரு பஞ்சாபிக்காரரும் வருகிறார்,'' என்று ஒரு குரல் காதில் விழுந்தது. உடனே நான் புத்தகத்தை கீழே வைத்துவிட்டு என் இருக்கையை விட்டு எழுந்தேன். அதே சமயத்தில் ஸ்ரீ சிவானந்தரும் என் அறைக்குள் நுழைந்தார். உடனே அவர் பாதம் பணிந்து, ''தங்கள் அருள் வாக்குப்படியே சென்று வருகிறேன்''

என்றேன். வழியில் கொஞ்சம் கஷ்டம் ஏற்பட்டாலும் கலங்காமல் இருங்கள்; இறுதியில் எல்லாம் நன்மையாகவே முடியும்'' என்று ஆசீர்வதித்துச் சென்றார்.

அன்று பகல் சுமார் 3 மணி இருக்கலாம். ஒரு பஞ்சாபிக்காரர் என்னிடம் வந்து ''ஸ்ரீ சுவாமிஜீ உத்திரவுப்படி தேவப்பிரயாகைக்குப் புறப்படலாமா?'' என்றார். "நான் தயாராக இருக்கிறேன்" என்றேன். ''காலுக்குப் பாதரட்சை ஏதாவது போட்டுக்கொள்ளுங்கள்'' என்றார். ''என்னிடமிருந்த பாதரட்சையை ஒருவருக்குக் கொடுத்து விட்டேன்'' என்றேன். "யாருக்குக் கொடுத்தீர்கள்" என்றார். ''ரெங்கூனிலிருந்து அன்பரொருவர் ஸ்ரீ சுவாமிஜீயைப் பார்க்க வந்தார்; அவர் பாதரட்சையை ஹரித்துவாரத்தில் வைத்துவிட்டு மறதியாக இவ்விடம் வந்துவிட்டார்; இவ்விடம் பங்குனி, சித்திரை மாதங்களில் வெயில் கடுமையாகவே இருக்கும்; வெயில், மழை, பனி, காற்று இவைகள் மற்ற தேசங்களைவிட இங்கு மிகவும் கடுமை; அவர் படும் துயரைக் கண்ட நான் எனது பாதரட்சையை கொடுத்தேன்; அவர் அதை அணிந்துகொண்டார்'' என்றேன். இவ்வாறு பேசிக் கொண்டே இருவரும் நடந்து செல்லலானோம்.

ரிஷிகேஷத்திலிருந்து தேவப்பிரயாகை 44மைல். நாங்கள் புறப்படும்போது பஸ் சென்றுவிட்டது. காலை 10 மணிக்குள் சென்றால்தான் பஸ் கிடைக்கும். பிற்பகல் தேவப்பிரயாகையிலிருந்து வருகிற பஸ்தான் உண்டு. நடுவில் கங்கை; வடபுறம் பஸ் செல்லும் வழி; தென்புறம் யாத்ரீகர்கள் நடந்து செல்லும் வழி. பஸ் செல்லும் வழியில் (வடபுறத்தில்) பாதி தூரத்தில்தான் தங்குமிடமும் கடைகளுமிருக்கின்றன; தென்புறத்தில் ஐந்து மைலுக்கு

ஒரு தங்குமிடமிருக்கிறது. இதற்கு ''சட்டி'' என்று பெயர். நாங்கள் புறப்பட்ட அன்று இரவு ஒரு சட்டியில் தங்கினேம். மறுநாள் காலையில் புறப்பட்டு மேலே ஏறிச் செல்லலானேம். அன்று பகலில் ஒரு சட்டியில் தங்கினேம். அங்கு வேகாத சோறும், பருப்பும் கிடைத்தன. இதை உட்கொண்டு இம்மலைப் பிரதேசங்களில் யாத்திரை செய்வதெப்படி? சிறிது நேரத்தில் அங்கிருந்து புறப்பட்டு இரவு ஒரு சட்டியில் தங்கி, மறுநாள் காலையில் எழுந்து பார்த்தால் என் கால் விரல்களில் வீக்கங் கண்டுவிட்டது. வழியோ பாதிதான் வந்திருக்கிறது. வெயில் சூடு ஒருபுறம்; ருசியற்ற உணவால் களைப்பு மற்ருெருபுறம். இவைகளையும் சமாளித்துக்கொண்டு மேலே சென்ருல் வழி நெடுகக் கல் துணுக்குகள் கால்களை அழுத்தி உபயகுசலம் விசாரித்த வண்ணமாக இருந்தன. இத்துடன் மேல் மூச்சும், கீழ் மூச்சும் வாங்கிற்று. இந்நிலையில் ரிஷிகேஷத்திற்குத் திரும்பிவிடலாமா என்று நினைத்தேன். ஆனுல் என் மனச்சாட்சி ''வைராக்கியமாகச் செல்; திவ்ய ஸ்நானம், தரிசனம் பெறலாம்'' என்றது. திரும்பச் செல்வதானுலும் இவ்வளவு வழி நடந்துதானுக வேண்டும். இரு தலைக்கொள்ளி எறும்புபோல நான் தவித்தேன்.

என்கூட வரும் பஞ்சாபிக்காரர் நான் நடக்க முடியாமல் படுந்துயரைக் கண்டு, ''மெதுவாய் நடந்து வாருங்கள்; நான் முன்னுல் சிறிது தூரம் சென்று காத்திருக்கிறேன், எனக் கூறி முன்னுல் நடந்து ஒரு பர்லாங்கு தூரம் சென்று காத்திருப்பார். நான் அவரைக் கடந்து ஒரு பர்லாங்கு தூரம் சென்ற பிறகு அவர் புறப்பட்டு எனக்குமுன் நடந்து என்னை அழைத்துச் செல்வார். நானும் விடா முயற்சியுடனும், ஊக்கத்துடனும் நடந்தேன்.

இவ்வாறு செல்லுகையில் என் உடல் களைப் புற்றது. ஆனல் மனம் களைப்புறவில்லை. உள்ளத்தில் உறுதி நிலைத்தது; வைராக்கியமும் பிறந்தது. ''மேலே ஏறிச் சென்ருல், ஸ்நானமும் தரிசனமும் பெறலாம். அது இயலாவிடில் இந்த கர்ம சரீரத்தை கங்காதேவியிடம் ஒப்படைத்து விடுவது,'' என்று ஒரு திடமான சங்கல்பத்தைச் செய்து கொண்டேன். அச்சமயம் கங்கையில் ஓர் பிணம் செல்வதைக் கண்ட நான் ''ஓ! பிணமே, சிறிது தங்குவாயாகில் உன்னுடன் கூட வருவதற்கு நடைப்பிணம் ஒன்று இதோ வருகிறது; இரண்டு பேரும் சேர்ந்து செல்லலாம்'' என்று புலம்பினேன். ''ஹே ராமச்சந்திரா! உன் தரிசனர்த்தம் வரும் ஓர் ஏழையைச் சோதித்தது போதாதா? இன்னும் கடுஞ் சோதனையைத் தாங்கும் சக்தி என்னிட மில்லையே! இதுவும் நின் திருவுளச் சம்மதமோ? நாஞக உன் தரிசனம் பெற இச்சித்து வந்திருந்தால் நீ சோதிப்பது சாலவும் நன்று. ஆத்ம ஜோதியால் அஞ்ஞான இருள் அகற்றி, அந்தகாரமாகிய மாயை யிலிருந்து வெளியேற வகையறியாமல் மாளும் மாந்தர்களுக்கு ஞானத்துணை புரியும் என் குரு நாதன், அருட்பெருஞ்சோதி ஸ்ரீ சரூபியான ''சிவானந்தர்'' அன்ருே ஆசீர்வதித்து அனுப்பி யிருக்கிருர். அம்மகானின் ஆசிக்கும் அருள் குன்று மாயின் இப்பாருலகிலே தெய்வீகச் சக்தி அடியுடன் அற்றுவிட்டது என்றல்லவோ ஏற்பட்டுவிடும்'' எனக் கதறினேன். பிறர் துயரைத் தன் துயராக வும், பிறர் சுகத்தைத் தன் சுகமாகவும் கருதி, பிறர் நன்மையைக் கோறியே தன் உடல் பொருள் ஆவிகளைத் தியாகம் செய்யப் பிரதிக்ஞை பூண்ட வரும், உத்தம பிரமசரியமுடையவரும், ராகத் துவேஷ மற்றவரும், காமக்குரோதாதிகளைக் கடந்த வரும், பாபத்திற்கு வழிகாட்டியாகிய மாயையை வென்றவரும், இக்கலியுகத்தின் தருமதேவதை

போன்று விளங்கும் சிவானந்தரைச் சிந்தித்தேன். ''தன்னை வெட்டுவோருக்கும், தயையுடன் குளிர்ந்த நிழலைக் கொடுத்து, சத்துருபாவமற்ற விருக்ஷம் போல், சில தர்க்கவாதிகளையும், தனக்குக் கேடு நினைப்பவர்களையும், ஸர்வாத்ம பாவத்துடன் நல் வழிப்படுத்திக் கருணையுடன் ஞான மார்க்க ஏணியில் ஏற்றுவிக்கும் சிவானந்த வள்ளலின் அருள் வாக்கும் நிஷ்பலமாகிவிடுமா? என்று கூறியவாறே பிரக்ஞையற்று ஓர் மரத்தடியில் சாய்ந்தேன்; அப் போது பகல் சுமார் பதினொரு மணியிருக்கும்.

சிறிது நேரம் சென்றது. ''ஓ! பாபுஜி!'' என்ற ஓர் இனிய குரல் என் செவிகளில் ஊடுருவிப் பாய்ந்தது. திடுக்கிட்டு கண் விழித்துப் பார்த்தேன். தோளில் சுமையும் துவாதச நாமமும் சுமார் 55 வயதும் கொண்ட ஒரு பெரியார் என் முன்னே நின்றார். அவர் தாய்போன்ற கருணை காட்டி ''தாங்கள் எந்த ஊர்? எங்கிருந்து வருகிறீர்கள்? எங்கு செல்லுகிறீர்கள்?'' என வினவினார். ''தட்சிண தேசத்திலிருந்து வந்தேன்; ரிஷிகேஷம் ஸ்ரீ சிவானந்தஜீ அவர்கள் என்னைத் தேவப்பிரயா கைக்கு அனுப்பினார்'' என்றேன். ''ஆஹா! அந்த ஞான வள்ளலாகிய மகாத்மாவா! அவர் வருங் கால முணர்ந்துரைக்கும் தீர்க்கதரிசியன்றோ! நான் அவரைத் தரிசிக்கவே ரிஷிகேஷம் செல்லுகிறேன். நான் தேவப் பிரயாகையிலிருந்து புறப்படும்போது காவியங்கியணிந்த ஒருவர் என்னிடம் வந்து, 'நீங்கள் செல்லும்போது எதிரே ஒரு தட்சிண தேசத்தார், சிவானந்தஜீயால் அனுப்பப்பட்டவர், காலில் பாதரட்சையின்றி வருவார். அவரிடம் இதைக் கொடுத்துச் செல்லுங்கள்' என்று கூறி ஒரு ஜோடி ரப்பர் பாதரட்சையை என்னிடம் கொடுத் தார். அதை நீங்கள் ஏற்றுக்கொள்ளுங்கள்'', என்று ஒரு ஜோடி பாதரட்சையை அவர் என்னிடம்

கொடுத்தார். நான் பாதரட்சையை வாங்கி அணிந்தேன்; என் காலுக்கு அளவு கொடுத்தாற் போல் அவை அவ்வளவு சரியாக இருந்தன. இப்படிக் கொடுத்தனுப்பியது யாராயிருக்கலாம்? சிவானந்தரின் அருள் சக்தியே மாற்றுருவாக வந்து தேவப்பிரயாகையிலிருந்து கொடுத்தனுப்பியிருக்கிறது என உணர்ந்தேன். கொண்டு வந்தவர் யாராக இருக்கலாமெனக் கருதுங்கால் ஸ்ரீராமபிரானின் திருவிளையாடலேயென நிச்சயிக்கலானேன். அங்கு நிற்கும் நாமக்காரரின் பொற்பாதம் பணிந்தேன். என் களைப்பெல்லாம் சூரியனைக் கண்ட பனி போல் நீங்கிவிட்டது. பிறவிக் குருடன் கண் பெற்றது போலும், தரித்திரனுக்குப் பெருநிதி கிடைத்தாற்போலும், கட்டிலிருந்து அவிழ்த்து விடப்பட்ட கன்று அதன் தாயை அடைந்தாற் போலும், முடவன் கால் பெற்றது போலும் மகிழ்ச்சியுடன் அவரைத் துதித்தேன்.

''ஹே! ஸத் குருநாதா! தங்கள் காருண்யத்திற்கும் அன்புக்கும் அடியேன் புரியும் கைம்மாறு என்ன இருக்கிறது'', என்று கூறிக்கொண்டிருக்கும் போது என் பின்னால் வரும் பஞ்சாபிக்காரர் அங்கு வந்து சேர்ந்தார். என் பாதரட்சையையும் நான் களைப்பற்று இருப்பதையும் என் எதிரில் நின்ற நாமக்காரரையும் கண்டு, ''தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்'' என அவரிடம் வினவினார். நாமக்காரர் என்னிடம் கூறியதுபோல் அவரிடமும் கூறினார். அதைக் கேட்ட பஞ்சாபிக்காரர் அந்த நாமக்காரர் பாதங்களில் பணிந்து, ''ஆஹா! சிவானந்தரின் சித்துக்களில் இதுவும் ஒன்றுபோலும்! இக்கலியுகத்தில் தட்சிண தேசத்திலுதித்து, உத்தர தேசமாகிய இமயமலையில் கங்கா தீரத்திலிருந்து கொண்டு உலகுக்கெல்லாம் ஞான சூரியனாய்ப் பிரகாசிக்கும் சிவானந்தரையும், அவர் அருள் சக்தி

யையும் துதிக்க வேண்டுமென்ருல் அகராதியில் வார்த்தையில்லை'', என்று கூறி அவரைப் போற்றிஞர். வந்த நாமக்காரர் எங்களிடம் விடைபெற்றுத் தம் வழியே சென்ருர். நாங்கள் அங்கிருந்து புறப்பட்டபோது நாமக்காரர் எங்கே செல்லுகிருர் என்று திரும்பிப் பார்த்தோம்; மாயமாய் மறைந்தார். ஆஹா! என்ன ஆச்சரியம்! இறைவனின் கருணைதான் என்ன! 'வளையும் வரை பார்ப்பார்– ஒடிந்துபோகும்வரை பார்க்கமாட்டார்'— அதுவன்ருே பகவானின் திருவிளையாடல். மகான்களோ அஷ்டமா சித்திகளால் உலகைச் சோதிப்பார்கள். அவர்களது சக்தியை எவர் அறியமுடியும்! இவ்வாறு சிந்தித்துக்கொண்டே நாங்கள் இருவரும் போட்டி போட்டு நடக்கலானேரம். இரவு ஒரு சட்டியில் தங்கி மறுநாள் பிற்பகல் சுமார் ஒரு மணிக்கு தேவப்பிரயாகை போய்ச் சேர்ந்தோம்.

மறுநாள் ஸ்ரீ ராம நவமி. பாகீரதி-அலகநந்தா ஆகிய இரு நதிகளும் சங்கமித்து கங்கையென்ற நாமதேயத்துடன் அங்கிருந்து புறப்படுகிறது. அங்கே ஜகத்குரு ஸ்ரீ ஆதி சங்கரரே ஸ்ரீ ராமரைப் பிரதிஷ்டை செய்துள்ள ஒரு ஆலயம் உண்டு. ஸ்ரீ ராமருடைய தரிசனம் பாப விமோசனம் என்பர். கங்கா ஸ்நானம் செய்து ஸ்ரீ ராமபிரானின் தரிசனமும் பெற்று பிற்பகல் உணவு கொண்டோம். சுமார் ஒரு மணிக்குப் புறப்படும் பஸ்ஸில் ஏறி இரவு சுமார் 7 மணிக்கு ஆனந்த குடீர் வந்து சேர்ந்தோம். குரு தரிசனம் பெற்ருேம். வழிகளில் நடந்த அற்புதங்களை அவருக்கு அன்புடனுரைத்தேன். ''அவனது தெய்வீகச் சக்தியை யாராலும் அளவிட முடியாது; அவனிடம் அன்பு கொண்டோரை அவன் முதலில் சோதிப்பதும் பிறகு பாதுகாப்பதும் வழக்கம்; 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது'

என்ற மகாவாக்கியம் பொய்யாகுமா!'' என்று கூறி குருநாதர் என்னை ஆசீர்வதித்தார்.

இச்சம்பவம் 1941-ம் வருடம் மார்ச்சு மாதம் நிகழ்ந்ததாகும்.

---

## அத்தியாயம் — 9.

## நான் பற்றுகள் நீங்கி உபதேசம் பெறுதல்

சில தினங்களுக்குப் பின் நான் சிவானந்தரிடம் அனுமதி பெற்றுச் சென்னைக்குச் சென்றேன். பிறகு செட்டிநாடு சென்று காரைக்குடியில் வியாபாரம் நடத்தினேன். காரை நகர் செட்டிநாட்டின் நடு நாயகம், இராமநாதபுரம் ஜில்லாவின் குபேர பட்டணம். அங்கே என் வியாபாரம் சொற்பமாக நடந்துவந்தது. ஆனால் ரிஷிகேஷம் நினைவும் சிவானந்தரின் உபதேச மொழிகளுமே என் மனக் கண் முன் தோன்றிவந்தன. சிவானந்தரின் செய்தித் தாள்களும் பல அரிய நூல்களும் எனக்குக் கிடைத்து வந்தன. சிவானந்தர் படம் எப்பொழுதும் பூஜை யில் வைக்கப்பட்டிருந்தது. தினமும் முதலில் நடக்கும் வியாபாரத் தொகையை, பெரிதோ, சிறிதோ, ஓர் உண்டியலில் போட்டு அதை மாதம் முதல் தேதி அன்று ரிஷிகேஷத்திற்கு மணியார்டர் செய்து வருவது என் வழக்கமாயிருந்தது.

பேரின்பமென்பது திகட்டாத இன்பம். இதற்கு எந்தக் காலத்திலும் சலிப்பு ஏற்படாது. சிற்றின்பம் ஒரு நொடியின்பம். அதன் பின் துன்பமே ஏற்படுகிறது. பேரின்ப ருசியை அனுபவித்தவர், சிற்றின்பத்தை நாடமாட்டார். சுமார் ஒரு மாத காலம் பேரின்பக் கடலில் மூழ்கி ரிஷிகேஷ

வாசம், கங்கா ஸ்நானம்-பானம், சாது ஸேவை, ஸத்ஸங்கம், ஸங்கீர்த்தனம், தியானம், ஜபம், ஆஸனங்கள் இவைகளை அனுபவித்துவிட்டு திரும்பவும் கர்மபூமிக்குச் செல்ல யாருக்குத்தான் மனம் வரும்? என் மனம் இவைகளை அனுபவித்த பிறகு, எங்கு இருந்தாலும், எப்போதும் பேரின்பத்தையே நாடிச் சென்று கொண்டிருந்தது. என் ஸ்தூல சரீரம் இவ்விடமும், சூக்ஷ்ம சரீரம் ரிஷிகேஷத்திலுமாக இருந்து வந்தன.

ஆனால் இப்படி எத்தனை நாள் பிரிந்திருக்க முடியும்! போ ரிஷிகேஷம், என்றது மனம். 1943-ம் வருஷம் ஸெப்டம்பர் மாதம், 6-உ ரிஷிகேஷம் வந்து சேர்ந்தேன். ஆனந்தக் குடீரில் சிவானந்தரின் ஜன்ம விழா 8-உ அதிவிமரிசையாக நடந்தது. பிறகு அக்டோபர் மீ 5-உ பம்பாய்க்கு அவருடன் சென்றேன். அங்கே 23 நாள் வரையில் தங்கினோம். கிராமபோன் ரிக்கார்டு எடுக்க ஸ்டுடியோவிற்குச் சென்றோம். சிவானந்தர் பாடிய ''ஸங்கீர்த்தன இராமாயணம்'' பக்க வாத்தியங்களுடன் இசைத் தட்டில் பதிவு செய்யப்பட்டது. சாதாரணமாய் பெரிய பாடகர்களும் கூட தினம் ஒரு புறம்தான் இசைத்தட்டில் பதிவு செய்து கொள்வார்கள். கூடினால் ஒரு இசைத்தட்டில் இரு புறமும் பதிவு செய்து கொள்வார்கள். இதற்கு மேல் யாரும் பதிவு செய்து கொள்வதில்லை. ஆனால் எல்லாவற்றிலும் மேலானவர் அன்றோ சிவானந்தர்! தனக்குக் களைப்பு ஏதும் இல்லாமல் தினம் இரண்டு மூன்று இசைத்தட்டுகளில் இருபுறமும் பதிவு செய்து கொண்டார். பக்கவாத்தியக்காரர்களும், ஸ்டுடியோக்காரர்களும் களைப்படைந்தனர். அவருக்கு அப்பொழுது வயது 57. சரீரமோ ஸ்தூலம். ஆனால் உத்தம பிரமச்சரியமுடையவராதலால் இளம் பக்க வாத்தியக்காரர்களையும், ஸ்டுடியோக்

காரர்களையும் களைப்படையச் செய்து தான் கம்பீரத்துடன் விளங்கினார். எல்லோரும் இவர் திறமையைக் கண்டு வியந்தனர்.

பிறகு பம்பாயிலிருந்து புறப்பட்டு ரிஷிகேஷம் வந்து சேர்ந்தோம். அங்கே சுமார் ஏழு மாதங்கள் வரை தங்கினேன். எனது ஆத்மப் பசியையும், ஞான தாகத்தையும் சிறிது தணித்துக்கொண்டேன். எனினும் இவ்விடமிருந்து செல்ல மனம் வரவில்லை. ஆனால் இவரோ, ''இன்னும் சொற்ப நாள் கூட பாக்கி இருக்கிறது; இப்பொழுது சென்று மறு முறை வாருங்கள்; அதுவே கடைசி முறை, மனம் பக்குவமாகிவிடும்,'' என்று கூறி என்னை அனுப்பினார்.

அவர் மனப்படியே ஊர் சென்று, காரைக்குடி வியாபாரக் கிளை ஒன்றை புதுக்கோட்டையில் ஆரம்பித்து, இங்கும் காரைக்குடியைப்போலவே முதல் வியாபாரத் தொகையை உண்டியலில் போட்டு அதை மாதா மாதம் ரிஷிகேஷத்திற்கு அனுப்பி வந்தேன்.

''எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே''

என்றபடி நான் வியாபாரத்திலோ, வியவகாரத்திலோ, எவ்வளவு ஈடுபட்டிருந்தாலும், பற்றின்றியே வாழ்க்கையை நடத்திவந்தேன். என்னைச் சேர்ந்தவர்களும் எனது நண்பர்களும், நான் என்றாகிலும் ஒருநாள் இவைகளை விட்டுச் செல்லுவது நிச்சயமெனக் கருதினார்கள்.

வாசம், கங்கா ஸ்நானம்-பானம், சாது ஸேவை, ஸத்ஸங்கம், ஸங்கீர்த்தனம், தியானம், ஜபம், ஆஸனங்கள் இவைகளை அனுபவித்துவிட்டு திரும்பவும் கர்ம பூமிக்குச் செல்ல யாருக்குத்தான் மனம் வரும்? என் மனம் இவைகளை அனுபவித்த பிறகு, எங்கு இருந்தாலும், எப்போதும் பேரின்பத்தையே நாடிச் சென்று கொண்டிருந்தது. என் ஸ்தூல சரீரம் இவ்விடமும், சூக்ஷ்ம சரீரம் ரிஷிகேஷத்திலுமாக இருந்து வந்தன.

ஆனால் இப்படி எத்தனை நாள் பிரிந்திருக்க முடியும்! போ ரிஷிகேஷம், என்றது மனம். 1943-ம் வருஷம் ஸெப்டம்பர் மாதம், 6-ஙு ரிஷிகேஷம் வந்து சேர்ந்தேன். ஆனந்தக் குடீரில் சிவானந்தரின் ஜன்ம விழா 8-ஙு அதிவிமரிசையாக நடந்தது. பிறகு அக்டோபர் மீ 5-ஙு பம்பாய்க்கு அவருடன் சென்றேன். அங்கே 23 நாள் வரையில் தங்கினோம். கிராமபோன் ரிக்கார்டு எடுக்க ஸ்டுடியோவிற்குச் சென்றோம். சிவானந்தர் பாடிய "ஸங்கீர்த்தன இராமாயணம்" பக்க வாத்தியங்களுடன் இசைத் தட்டில் பதிவு செய்யப்பட்டது. சாதாரணமாய் பெரிய பாடகர்களும் கூட தினம் ஒரு புறம்தான் இசைத்தட்டில் பதிவு செய்து கொள்வார்கள். கூடினால் ஒரு இசைத்தட்டில் இரு புறமும் பதிவு செய்து கொள்வார்கள். இதற்கு மேல் யாரும் பதிவு செய்து கொள்வதில்லை. ஆனால் எல்லாவற்றிலும் மேலானவர் அன்றோ சிவானந்தர்! தனக்குக் களைப்பு ஏதும் இல்லாமல் தினம் இரண்டு மூன்று இசைத்தட்டுகளில் இருபுறமும் பதிவு செய்து கொண்டார். பக்க வாத்தியக்காரர்களும், ஸ்டுடியோக்காரர்களும் களைப்படைந்தனர். அவருக்கு அப்பொழுது வயது 57. சரீரமோ ஸ்தூலம். ஆனால் உத்தம பிரமச்சரியமுடையவராதலால் இளம் பக்க வாத்தியக்காரர்களையும், ஸ்டுடியோக்

காரர்களையும் களைப்படையச் செய்து தான் கம்பீரத்துடன் விளங்கினார். எல்லோரும் இவர் திறமையைக் கண்டு வியந்தனர்.

பிறகு பம்பாயிலிருந்து புறப்பட்டு ரிஷிகேஷம் வந்து சேர்ந்தோம். அங்கே சுமார் ஏழு மாதங்கள் வரை தங்கினேன். எனது ஆத்மப் பசியையும், ஞான தாகத்தையும் சிறிது தணித்துக்கொண்டேன். எனினும் இவ்விடமிருந்து செல்ல மனம் வரவில்லை. ஆனால் இவரோ, ''இன்னும் சொற்ப நாள் கூட பாக்கி இருக்கிறது; இப்பொழுது சென்று மறு முறை வாருங்கள்; அதுவே கடைசி முறை, மனம் பக்குவமாகிவிடும்,'' என்று கூறி என்னை அனுப்பினார்.

அவர் மனப்படியே ஊர் சென்று, காரைக்குடி வியாபாரக் கிளை ஒன்றை புதுக்கோட்டையில் ஆரம்பித்து, இங்கும் காரைக்குடியைப்போலவே முதல் வியாபாரத் தொகையை உண்டியலில் போட்டு அதை மாதா மாதம் ரிஷிகேஷத்திற்கு அனுப்பி வந்தேன்.

''எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப்
பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே''

என்றபடி நான் வியாபாரத்திலோ, வியவகாரத்திலோ, எவ்வளவு ஈடுபட்டிருந்தாலும், பற்றின்றியே வாழ்க்கையை நடத்திவந்தேன். என்னைச் சேர்ந்தவர்களும் எனது நண்பர்களும், நான் என்றாகிலும் ஒருநாள் இவைகளை விட்டுச் செல்லுவது நிச்சயமெனக் கருதினார்கள்.

பசியுடையவர்க் கன்றே உணவின் மகிமை தெரியும்! என்னுள்ளம் பேசியதாவது:— ''யார் யாருக்குத் துணை செய்ய முடியும்? மாய்ந்து போகும் மானிடரால் ஆவதென்ன? 'தந்தை தாய் தமர் தார இவையெல்லாம் சந்தையில் கூட்ட மன்றே'' என்றார் தாயுமான ரிஷி. பந்த பாசம் மிகவும் கொடியது; அது ஆளைக் கரையேற விடா மல் ஸம்ஸாரச் சேற்றில் அமுக்கி நரகக் குழியில் தள்ளுகிறது.

''இதோ ரிஷிகேஷம்'' என்று புறப்படுவேன். இன்று வேண்டாம் நாளைப் போவோம் எனத் தோன்றும். பிறகு அடுத்த மாதம் போகலாமென மனம் தயங்கும். சிறிது காலம் சென்ற பிறகு ஆத்மீக விஷயங்களில் இறங்கலாம் என்று தோன்றும். இப்படியாக நம் வயது சென்று கொண்டிருப்பதை அறியாமல் மயங்கியிருக்கிறோம். ஆதலால் நான் தீர்க்கமாய் ஆலோசித்து புதுக்கோட்டை வியாபாரத்தை எனது ஆப்த நண்பர் ஸ்ரீ வெங்கிடாசலம் என்பவரிடம் ஒப்புவித்தேன்.

1947—ம் ௵ மே ௴ முதல் எனக்கும் அந்த ஊர் வியாபாரத்திற்கும் தொடர்பே இல்லை. 7-5-47-ல் அவ்விடமிருந்து புறப்பட்டு 13-5-47-ல் ரிஷிகேஷம் வந்து சேர்ந்தேன். ஸ்ரீ சிவானந்தர் தரிசனம் பெற்றேன். ''பவக்கடல் மூழ்கிப் பரிதவிப்போரை தவப் பெரும் புணையால் தாங்கும் தேவே! பாசபந்தத்தே பரிதவிப்போர்க்கு நாசந் தவிர்க்கும் நன் மணியே!'' எனப் போற்றிப் பணிந்தேன். இம்மாயா சரீரத்தைப் புனிதமாக்கக் கூடிய தீர்த்தங்களில் முக்கியமானவை யமுனோத்திரி, கங்கோத்திரி, கோமுகம். இவ்விடங் களில் நீராடி வரும்படி அவர் கட்டளையிட்டார்.

அதன்படியே 16–5–47-ல் புறப்பட்டு டெகிரி வரை பஸ்ஸிலும் பிறகு கால்நடையாகவும் யமுனோத்திரி சென்றேன். வழிகளைப்பற்றி விவரிக்கிறதென்றால் மிகவும் கடினம்; வெகு சிலரே இந்த யாத்திரை செய்கிறார்கள். சாதாரணமாய் பத்ரி யாத்திரை மிகவும் சுலபமானது. 50 மைல்தான் நடந்து செல்லவேண்டும். அதுவும் யமுனோத்திரி, கங்கோத்திரி, கேதாரம் இந்த யாத்திரை செய்தவர்களுக்கு, பத்ரி யாத்திரையைப் பற்றிக் கவலையே இல்லை. யமுனோத்திரி வழி கடினம், குளிரும் ஆளை நடுக்கும். அங்கு மலையிலிருந்து வெந்நீர் அருவி போல் விழுகிறது. இந்த இடத்தில் ஓர் சிறிய குளம் பறித்திருக்கிறார்கள்; அதில் அந்த வெந்நீர் வந்து நிரம்புகிறது. இது நிறைந்ததும் நீர் வழிந்து செல்கிறது. இதில்தான் அனைவரும் ஸ்நானம் செய்வது வழக்கம். நானும் அதில் ஸ்நானம் செய்தேன். பிறகு காங்கோத்திரி வரும் வழியில் என் காலில் ஒரு விஷக்கல் குத்தி நடக்க முடியாமல் அங்கேயே பதினைந்து தினங்கள் தங்கினேன். இந்த வழியும் கடிதே. இங்கே வெந்நீர் கிடையாது. குளிரும் அதிகம்., எனினும் தங்குவதற்கு வசதியான இடங்கள், கடைகள், பால், தயிர் முதலியன கிடைக்கும்.

கோமுகம் செல்வது மிகவும் கடினமென்றார்கள். அனேகம் பேர் புறப்பட்டு 3-மைல் 5-மைல் 8-மைல் வரை சென்றும் திரும்பி காங்கோத்திரி வந்து சேர்வார்கள். சிலரினும் சிலரே, நூற்றுக்குப் பத்துப்பேரே, கோமுகம் சென்று திரும்புவார்கள். இரவு தங்க அவ்விடம் வசதியில்லாதபடியால் நடுவேயிருக்கும் தர்மசாலைக்கு வந்துவிடுவார்கள். காங்கோத்திரியிலிருந்து, 15 மைல் கோமுகம். 9வது மைலில் அந்த தர்மசாலை இருக்கிறது. அதில் இரவு கணப்புப் போட்டுக்கொண்டு தீக்காய்வார்கள்.

உணவுச் சாமான்களைக் கையில் கொண்டுபோக வேண்டும். பனிக்கட்டிகள் பாறைபோன்று கங்கைக் கரையிலும் தண்ணீரிலும் கிடக்கும். அங்கே குளித்தால் பத்து நிமிஷம் கை கால்கள் மரத்துப் போகும். ஸ்நானம் செய்து, ஆகாரம் முடித்துக்கொண்டு ஏழு மைலில் இருக்கும் தர்ம சாலைக்கு யாத்ரீகர்கள் வந்துவிடுவார்கள். நானும் அவ்வாறே செய்தேன். பிறகு காங்கோத்திரி வந்து, ரிஷிகேஷம் திரும்பினேன்.

ஆனந்த குடீரில் 8—9—51 அன்று ''சிவானந்தர் வைரவிழா'' வெகு விமரிசையுடன் நடைபெற்றது. 12—9—47ல் எனக்கும் மற்றும் சிலருக்கும் குருதேவர் கிரியாலோபமன்னியில் சந்நியாசம் வழங்கினார். (வீரஜா ஹோமம், பிண்டப்பிரதானம் முதலியன சந்நியாசக் கிரியைகள்). அன்று முதல் பூர்வாசிரம நாமம் இறந்தது; தீக்ஷா நாமம் பிறந்தது. ''சுவாமி சிரத்தானந்த ஸரஸ்வதி'' என்ற நாமமும் எனக்கு வழங்கப்பட்டது. நான் மலேயாவிலிருந்த பொழுது இவர் போதித்த போதனைதான் இப்பொழுது என்னை இவரிடம் இழுத்துவந்து சீடனாகச் செய்தது.

சுமார் இருபத்தைந்து வருடங்களுக்கு முன், மலேயாவில் இருந்த பொழுது நான் இமயமலைச் சாரலுக்குச் செல்ல இவரிடம் அனுமதி வேண்டினேன். அப்போது மறுத்துவிட்டார். பிறகு ஒரு சமயம் நான் மனம் வருந்தும்போது என்னைச் சமாதானப்படுத்தி ''நாம் மகோன்னதமான ஞான பூமியில் அல்லவா சந்திக்கப்போகிறோம்'' என்றார். அது இப்பொழுது பலித்தது. ''நான் முதலில் சென்று சிறிது காலத்திற்குப் பிறகு நீ என்னிடம் வந்து சந்நியாசம் வாங்க வேண்டியவனாக இருக்கும் போது, வேறு யாரிடம் வாங்கமுடியும்?'' என்ற நீதி

வாக்கியத்தின் தத்துவம் இப்பொழுது வெள்ளிடை மலேபோல் விளங்கியது. இதிலிருந்து இவர் ஓர் தீர்க்கதரிசி என்பது மிகையாகாது.

சூரிய ஜோதி சொரூபமாகிய சிவானந்தரை மேகமாகிய குப்புசுவாமி சிலகாலம் மறைத்து வைத்திருந்தது. மேகம் விலகியவுடன் குப்புசுவாமி மறைந்தார். சிவானந்த ஜோதி உலகின் அஞ்ஞான இருளே நீக்கி ஆத்ம ஞான அ·ருள் ஒளியாக பிரகாசித்து வருகிறது.

இவர் மொழிந்ததும் வரைந்ததும் கணக்கில்லே. அவற்றில் சில இங்கே காணும்.

## சிவாமிருத மொழிகள்

### 1. அநித்திய சரீரம்

ஏ! ஆத்தும சொரூபா! உனது கடமைகளே நீ உணரவில்லேயே? நீ உலகினருடன் வாழலாம். ஆனுல் பற்றற்று வாழவேண்டும். உலகப் பற்று அதிகமிருக்கும் அளவுக்கு ஞானம் ஏற்படாது. எவ்வளவுக்கு உலகப்பற்று குறைந்து இருக்கிறதோ அதற்கேற்றபடி ஞானமும் வளர ஆரம்பிக்கும். பற்றில்லாமல் வாழ்வது எளிதன்று. அவ்வாறு வாழவேண்டுமானுல் ஆசைகளே முற்றிலும் துறக்க வேண்டும். பிறவி தோறும் பற்றிலே தோய்ந்து அதிலேயே ஊறி வந்திருப்பதால் உனது உள்ளம் பற்றுக்கு அடிமைப்பட்டிருக்கிறது.

நீ இந்த சரீரத்தில் வாழ்கிருய். இந்தச் சரீரம் உனக்கு மனேபோல் இருக்கிறது. இந்தச் சரீரம் உனது உணர்வைத் தூண்டுவதற்கு ஓர் கருவி என்பதை மறந்துவிடுகிருய். உனது நோக்கம்

நிறைவேறும் வரை இச்சரீரம் உனக்குத் தேவையாகும். பிறகு இந்தச் சரீரமாகிய சுமையை இறக்கிவிடவேண்டியதுதான். சரீரமென்பது என்ன? சுமார் 180 ராத்தல் எடையுள்ள எலும்பு கூடிய மாமிச மூட்டை. உட்பொருளான சரீரிக்கும் இச்சரீரத்திற்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. ஆகையால் இச்சரீரம் இருக்கும்போதே உலகப் பற்றை விட்டொழித்து அழிவற்ற ஆத்துமீய வாழ்வைப் பெற முயலுவதே அறிவாகும்.

## 2. விசாரம்

உலகை ஆள் வந்திருக்கும் நீ, உலகால் ஆளப் படுகிறாய். அடிமை விலங்கை அறுக்க வந்த நீ, அடிமை விலங்கிற் சிக்கியிருக்கிறாய். இன்பத்தை நுகர வந்த நீ துன்பத்திற்குட்பட்டிருக்கிறாய். அழிவில்லாத நீ, அழியும் பொருள்களில் ஆசை வைத்து உனது பிறப்புரிமையை இழந்து விடுகிறாய். எதிலும் நிகரில்லாத நீ எல்லாவற்றிலும் சிக்குடன் வாழ்கிறாய். சுக துக்கமற்ற நீ அவைகளை விலைக்கு வாங்கிக்கொள்கிறாய். உயர்வு, தாழ்வு அற்ற நீ தாழ்வையே உயர்வெனக் கொண்டு துன்புறுகிறாய். வேற்றுமை எதுவும் அற்ற நீ வேற்றுமையுடனே காணப்படுகிறாய். உலகில் தனவான், ஏழை எல்லாரும் உனக்கு ஒன்று, அதை மறந்து வேற்றுமைகளை உண்மையெனக் கருதி மயக்கமுறுகிறாய். பயமற்ற நீ உயிரைப் பெரிதாகக் கருதிப் பயமடைகிறாய். நீ உண்மை ஆத்துமனன்றோ? உனக்கும் எமனுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது?

தாமரை மலர் பறிக்கத் தடாகத்தில் இறங்கிய நீ உன் காரியத்தை மறந்து சேற்றில் சிக்கித் தவிக்கிறாய். வீடு பெற வேண்டிய நீ மாய உலகச் சேற்றில் சிக்குண்டு இடையூறு, துன்பங்களுக்கு

ஆளாகிருய். விளக்கில் விட்டில் பூச்சியும், தேனில் ஈ எறும்புகளும் விழுந்து மடிவதுபோல் மாய சுகத்தில் விழுந்து மடிகிருய். உன் பகுத்தறிவிஞல் உணராது பற்றுண்டு கெடுகிருய். உன்னை நீதான் அறிந்துகொள்ள வேண்டும். உன் உற்ருர் உறவினர் உனக்கு உதவி ஆக மாட்டார்கள் என்பதை நீ எப்பொழுதும் கருத்தில் வை.

இந்த உலகம் தோன்றியதெப்படி? இதில் நாம் பிறப்பதற்குக் காரணம் என்ன ? பிறந்தவருள் சிலர் தனிகராயும், பலர் தரித்திரர்களாயும் இருப்பதேன்? இச்செயல் எதஞல் ஏற்பட்டது? உலகில் காணும் பொருள்களெல்லாம் சாசுவதமா? அவை அழிவதேன்? நான் என்பது யார்? இறைவன் ஒருவனே மூலப்பொருள்; அவனிடமே யாவும் தோன்றி நின்று மறைகின்றன. அவனன்றி அவனியிலொன்றுமில்லை. எல்லாம் அவன் மயம். அவனை அடைவதற்குத்தான் இம்மானிடப் பிறவி வந்திருக்கிறது. இதை மறந்து குடும்பச் சுழலிற் சிக்குண்டு வருந்துகிருேம். உலகத்தோர் பணத் தைப் பெறுவதே தங்கள் புருஷார்த்தம் என்று எண்ணி அதைத் தேடுவதிலேயே தங்கள் வாழ் நாட்களைக் கழித்துவிடுகிருர்கள். இறைவனுடைய சரணரவிந்தத்தை இவர்கள் நினைப்பதும் இல்லை, முக்தியை அடைய வேண்டுமென்ற அவாவும் இவர் களுக்குச் சிறிதேனும் இல்லை. கருப்பப்பையி லிருந்து மண்ணில் பிறக்கும் பொழுதே ஆசா பாசங்களாகிய கயிற்ருல் பிணைக்கப்பட்டு உலகத் தந்தையான இறைவனை மறந்துவிடுகிருேம். பால பருவம் தாய் தந்தையரால் வளர்க்கப்படுகிருேம். அப்பொழுது நமக்கு ஏற்படும் உலக வாசனைகளே நம்மை சம்சாரச் சக்கரத்தில் சுழலவைக்கின்றன. பெற்ருேர் செய்யும் நன்மை யாது? ''மக்களுக்கு சத்துரு மாதா பிதாக்கள்'' என்பது முதுமொழி.

முன் பிறப்புக்களில் பெற்ருேர் யார் என்பது தெரியுமா? இம் மானிடப் பிறவி ஒழிந்து வேறு பிறவி அடையும்போது முன் பிறவியில் தாய் தந்தையர் யார் என்பதை யாராவது அறிந்த துண்டா? அவரவர்கள் பிறவிக் கடனைத் தீர்த்துக் கொள்ளுவது தவிர அவர்களுக்கும், நமக்கும் என்ன உறவு? இவ்வுலகம் அழியும் தன்மை வாய்ந்தது; உற்பத்தியுண்டெனில் நாசமும் உண்டென்பது நிச்சயம். இதை யறிந்தும் நாம் இதிலிருந்து வெளியேற முற்படாமல் மறுபடியும், மறுபடியும் பிறவிப் பிணி தரும் வழிகளிலேயே சென்று கொண்டிருக்கிறோம்.

## 3. பக்தி

சரீரம் அநித்தியம். பரமாத்துமா நித்தியம். நித்தியப் பொருளான பரமாத்துமாவை அடைவதற்கே வாழ்க்கை ஏற்பட்டுள்ளது. சரீரத்தில் ஆசை வைத்தால் பந்தம் ஏற்படும். ஜீவாத்துமாவோடு கூடியிருக்கும் சரீரம், அந்தச் சரீரத்தை நடத்தும் மனம், அந்த மனதில் உண்டாகும் அறிவு, அவ்வறிவுக்கு உறுப்பாகிய பஞ்சேந்திரியங்கள், இந்தப் பஞ்சேந்திரியங்களில் சம்பந்தமான புல் நுகற்சி—இவையெல்லாம் நானல்ல என்றும், நானே பரமாத்துமா என்றும், பகவான் விசுவநாதனே என்னுள் இருக்கிருன் என்றும் ஞானம் ஏற்பட வேண்டும். பக்தி செய்வதென்ருலும் அதற்கும் பல இடையூறுகள் தோன்றும். எது வரினும் வருக; நான் இந்தப் பக்தி மார்க்கத்திலிருந்து சிறிதும் வெளியேறமாட்டேன் என்ற வைராக்யம் ஏற்பட வேண்டும்.

சிவ நாமத்தையே செவிகள் கேட்கவும், அவனையே தலை வணங்கவும், அவன் புகழையே நாவு கூறவும் அவன் ஆலயத்திற்கே கால் நடக்கவும்,

அவன் திருமேனியின் திவ்விய மங்கள சொரூபத்தையே கண்கள் காணவும், அவன் மேனியிலணிந்த மலர் மாலையின் சுகந்தத்தையே நாசியானது முகரவும், அவன் அதி சுந்தர ரூபத்தையே மனம் தியானிக்கவும் வேண்டும். இதற்காகத்தான் நமக்கு அவயவங்கள் (கர்மேந்திரியங்கள் - ஞானேந்திரியங்கள்) ஏற்பட்டிருக்கின்றன. பக்தி சாதனத்தைத் தீவிரமாக நடத்திவந்தால் மறுபிறப்பு என்ற நோய் தீரும்; ''அற்றது பற்றெனின் உற்றது வீடு'' — மோக்ஷத்தை அடையலாம். ஆதலால் மாயா உலகினின்றும், வம்பு வழக்குகளினின்றும் வெளியேறுங்கள்.

## 4. மாயா மயக்கம்

''தாம் கொண்ட மனைவிகளாலும், மற்றும் ஸ்திரீகளாலும் மட்டும் இம்மயக்கம் வந்ததேயன்றி வேறில்லை'' — என்று இதிகாசம், புராணம் முதலியவைகள் யாவும் கூறுகின்றன. தசரதர் சக்கரவர்த்தியாக இருந்தும், பரமாத்துமாவைப் புத்திரனாக அடையப் பெறும் பாக்கியம் பெற்றிருந்தும் தன் மனைவியாகிய கைகேயினிடம் மயங்கி, தமதருமை ஸ்ரீ ராகவனைத் தேவியோடும், தம்பியோடும், கானகத்திற்கு அனுப்பித் தம் உயிரையும் துறந்தார். பரமாத்துமாவாகிய ஸ்ரீ ராகவனும் சீதையிடமுள்ள மயக்கத்தில் மூழ்கி, அவள் கூறியபடி மானைப் பிடிக்கச் சென்று சீதையைப் பிரிந்து பதினொரு மாதம் துயரடைந்தார். மூவுலகும் நடுநடுங்கச் செய்த சுந்தோப சுந்தர்கள், விசுவகர்மாவினால் சிருஷ்டிக்கப்பட்டு திருமாலால் அனுப்பப்பட்ட அதிரூபவதியான கன்னிகையின் ரூபத்தில் மயங்கினர். அவள் இவர்களில் எவன் ஜயவீரனோ அவனையே மணப்பதாகக் கூறினாள். அது கேட்டுப் போர்தொடுத்து ஒருவரையொருவர் வெட்டி இருவரும் உயிர்துறந்தார்கள்.

தான் பெற்ற வரத்தின் பெருமையால் தன்னுடன் எதிர்த்த வீரர்களின் பலத்தில் பாதியைப் பெற்ற வாலியானவன், தன் தம்பியின் மனைவியைக் கூடினன்; அதனால் ஸ்ரீ ராகவன் கணைக்கு இலக்காகி உயிர் துறந்தான். சீதையின் அழகில் மயங்கிய இலங்காதிபதியான தசக்கிரீவன் தன் குலத்துடன் போரில் மாண்டான். தர்மசீலர்களான பஞ்ச பாண்டவர்கள் தமது ஆசாரியர் குல முதல்வர், சகோதரர், பந்துக்கள் முதலிய யாவரையும் கொன்றது, பாஞ்சால ராஜன் புத்திரியான துரோபதையிடம் கொண்ட ஆசையல்லவா? நூறு அசுவமேத யாகம் செய்து இந்திரப் பட்டத்தையடைந்த நகுஷ சக்கரவர்த்தி அகஸ்தியர் சர்பத்தால் தேவ சிம்மாசனமும், திரைலோக்யாதிபத்யமும் துறந்து தன் அரசுமிழந்து மலைப்பாம்பானது இந்திராணியின்பால் ஏற்பட்ட மயக்கமல்லவா?

நாரதர் தந்த இரும்புக் கடலையை அநசூயை தான் பக்குவமாக்கினள்; மும்மூர்த்தி பத்தினிகளும், அப்படிச் செய்ய முடியவில்லை. அவளைச் சோதிக்க மும்மூர்த்திகளும் வந்தனர். கற்புக்கரசி அநசூயை அவர்களை மூன்று குழந்தைகளாக்கினள். வாணி, லக்ஷ்மி, உமை ஆகிய மூவரும் வந்து அநசூயையின் கற்பைப் போற்றி அவளை வணங்கி அவள் பெருமையால் தத்தம் கணவரை மீட்டுச் சென்றனர்.

## 5. தியாகம்

கர்ணனிடம் பிராமண வேஷத்தோடு இந்திரன் வந்து கவச குண்டலங்களைக் கேட்டபோது, அசரீரியானது ''ஏ கர்ண! வந்தவன் பிராமணனன்று. இந்திரனே. பரமாத்மாவாகிய ஸ்ரீ கிருஷ்ணன், உன்னை அர்ச்சுனன் அம்புக்கு இரையாக்கவே, இந்திரனை இப்பொழுது உன்னிடம் அனுப்பியிருக்கிறார்; கொடுக்காதே'' என்று எச்சரித்தது. சிறிதும்

மனம் கலங்காத கர்ணன் கவச குண்டலங்களைக் கழற்றி பிராமணனிடம் கொடுத்தான். தன்னை வந்து யாசித்த இந்திரனுக்கு ததீசி முனிவர் தம் முதுகெலும்பையே ஒடித்துக் கொடுத்தார். தன் மடியில் வந்து வீழ்ந்து அடைக்கலம் புகுந்த ஒரு புறாவுக்காக சிபிச் சக்கரவர்த்தி தன் சரீரத்தைக் கத்தியால் சேதித்துக் கொடுக்க அது நிறையாமல் தானே தராசில் ஏறி எடை சரிகட்டினார்.

ஒரு வேடன் வேட்டையாட வனம் சென்றான். அப்போது மேகம் குமுறி மழை கொட்டியது. கிழப் பருவமுடைய அவ்வேடன் ஒரு மரத்தில் வலை கட்டிப் பெண் புறா ஒன்றைப் பிடித்து வலையோடு வைத்துக் கொண்டிருந்தான். அதிக மழையினால் வேடன் நனைந்து குளிர் நடுங்க, கீழே விழுந்து, கை கால் விரைத்துச் சோர்ந்து கிடந்தான். மழை விட்டதும் இரை தேடச் சென்ற ஆண்புறாவானது தன் பேடு வலையிற் சிக்கி இருப்பதையும், அவ்வேடன் பிரக்ஞை யற்றுக் கிடப்பதையும் பார்த்து இரக்கங்கொண்டு அவ்வனத்திலுள்ள சிறு சுள்ளிகளைத் தன் மூக்கினால் கொத்திவந்து வேடனருகில் குவித்து, அங்கே எரியும் காட்டுத் தீயில் ஒரு கொம்பைத் தன் மூக்கினால் கொத்தி வந்து குவிந்திருந்த சுள்ளியிலிட்டுத் தனது இறக்கையினால் வீசி அனலாக்கியது. அந்தச் சூடு வேடுவன் உடலில் பட்டதும், அவன் மெல்ல எழுந்து உட்கார்ந்தான். அந்த ஆண் புறாவானது, அவ்வேடன் பசியினால் வருந்துவதைக் கண்டு எரிந்து கொண்டிருக்கும் நெருப்பிலே விழுந்து வேடுவனுக் குரிய பக்குவமான உணவாயிற்று. உணவை உண்ட வேடன் பறவையின் தியாக புத்தியைக் குறித்து வியந்தான்.

"இந்தப் புறா பறவையினத்தில் பிறந்திருந்தும், தன்னுடைய பெண் புறாவை வலையில் பிடித்து

வைத்துக் கொல்லக் கருதிய எனக்குத் தன்னுயிரையும் கொடுத்து உணவும் ஆனது. என்ன ஆச்சரியம்! என்ன தியாகம்! இப்பறவைக்குள்ள அறிவு கூட எனக்கில்லையே'' எனத் தன்னை நொந்து கொண்டான். இவ்வாறு ஒருபுறம் வியப்பையும் மற்றொருபுறம் தன்னால் அப்பறவைக்கு ஏற்பட்ட மரணத்தைக் குறித்து துக்கத்தையும் அடைந்த அவ்வேடன் உடனே வலையில் வைத்திருந்த பெண் புறுவை வெளியே எடுத்துவிட்டு அதை நோக்கி ''நீயாகிலும் பிழைத்துப்போ'' வெனக் கூறினான். அப் புறுவானது வேடனைப் பார்த்து ''ஐயா வேடரே! குளிரால் மயங்கிக் கிடந்த உம்மை என் நாயகன் எழுப்பியதோடுமின்றித் தானும் உமக்கு இரையான பின் நான் மாத்திரம் தனியே வாழச் சகியேன்; என்னையும் புசித்துவிடும்'' என்று கூறி அந்த நெருப்பில் விழுந்து அவ்வேடனுக்கு உணவானது.

## 6. அநித்திய உலகம்

உலகில் மனிதர் தேடும் செல்வம் நலியும். மிக உயர்ந்த பதவியிலிருக்கும் பிரமன், இந்திரன் முதலியோர்களும் ஒரு நாள் தங்கள் பதவியை இழந்தே விடுகின்றார்கள். மனை மக்கள் சுற்ற மெல்லாம் ஒரு நாள் பிரிந்துபோகும். இவைகள் அநித்திய சம்பந்தங்களே. பிராணனும் மரணத் தையே முடிவாகவுடையது. நன்றாய் பழுத்த பழங்களும் கீழே விழுவதையே முடிவாகவுடையன. உறுதியான கல் கட்டிடமும் ஒரு நாள் அழியும் தன்மையுடையதே. மனிதர்கள் பிணி மூப்பு சாக்காடு இவைகளுக்கு இரையாகின்றனர். சென்ற இரவு திரும்புவதில்லை. இளவேனிற் பருவத்து சூரியனுடைய கிரணங்கள் நீரை யுலர்த்துவது போல் இரவும் பகலும் இங்குள்ள

உயிர்களின் ஆயுளையும் உலர்த்துகின்றன. நீ இருக்கும் போதும் நடக்கும்போதும் உன் ஆயுள் வற்றிக்கொண்டே வருகிறது.

உனது பிரயாண வண்டியில் யமனும் பிரயாணம் செய்கிருன். நீ இறங்கும் ஸ்டேஷனையே அவனும் கவனித்து வருகிருன். உன் உடலில் நரை திரைகள் ஏற்பட்டு அது தளர்வுறு கிறது. நரையால் முதிர்ந்த மனிதன் என்ன உபாயம் செய்தும் இளமையாக முடியாது.

கட்டையுடன் கட்டையைப் பிணைத்துக் கடல் நீரில் மிதந்து செல்வதுபோல் இந்த சம்சார சாக ரத்தில் ஜீவன் சவாரி செய்கிருன். சில நாளில் சவாரி செய்யும் கட்டைகள் தனித் தனியே பிரிந்து செல்லும். பிறகு துணைக்கு யாரைத் தேட முடியும்?

வழியில் நடந்து செல்லும் கூட்டத்தாரைப் பார்த்து ''நானும் உங்களுடன் வருகிறேன்,'' என்று கூறிச் செல்வது போல், ஜீவப் பிரயாணம் நடக்கிறது. பெற்ருேர் போன வழியில் பிள்ளை களும் போக வேண்டியதே. மீட்க முடியாத மரணத்தையுடையவன் புலம்பி பயன் என்ன? வெள்ளம் திரும்பாது. ஆயுளும் திரும்பாது. காலம் சென்று கொண்டிருக்கிறது. தீமையால் தேடிய பாபமும், நன்மையால் தேடிய புண்ணியமும் உயிரைத் தொடர்து செல்லுகின்றன. வினைப்பயன் யாரையும் விடாது. அதை அனுபவித்தே தீர வேண்டும். இவைகளை நன்கறிந்தே மகான் தாயு மானவர் ''தந்தை தாய் தமர் தாரம் மகவெனும் இவையெலாம் சந்தையிற் கூட்டம்'' என்று பட்ட வர்த்தனமாகப் பறைசாற்றியிருக்கிருர். இந்த சம்ஸாரச் சுழலிலிருந்து கரையேறுவோனே பந்த மற்றவனுகிருன். ''வரும் போதும் தனியே

வந்தோம், போகும் போதும் தனியே போவோம்'' என்பதை நன்குணர்ந்து நாம் எப்பொழுதும் உஷாராக நடக்க வேண்டும்.

## 7. ஆராய்ச்சியின் பயன்

அறிவு தரக்கூடிய பற்பல நூல் ஆராய்ச்சியானது, கப்பல் மாலுமிக்குக் கரை விளக்குப் போன்றது. விளக்கு ஓர் இடத்தைக் குறிப்பிட்டுக் காட்டுகிறது. நூல்களும் இறைவனை அடையப் பல வழிகளைக் காட்டுகின்றன. விளக்குத் தெரிந்த பிறகு கப்பலை ஓட்டாவிட்டால் அது துறை சேராது. நூல்களின் ஆராய்ச்சிக்குப் பின் ''நான் எல்லா நூல்களையும், அதன் கருத்துக்களையும் உணர்ந்து விட்டேன்'' என்று கூறுவதினால் மட்டும் கடவுளை அடைய முடியாது; தான் கற்றதை அனுஷ்டித்து, அனுபவத்தில் கொண்டு வந்தால்தான் கடவுளை உணர முடியும்.

தடாகத்தில் சேறும் நீரும் கலந்துதானிருக்கிறது. நாம் வேண்டுவது தாகத்தைத் தணிக்கும் நீரே, சேறன்று. வீண் வாதத்தால் ஏற்படும் தாகத்தால் சேறையே பருக நேரிடும். கற்றறிந்துணர்ந்த ஞானி இரண்டும் கலந்த உலகில் மாயையாகிய சேற்றை விலக்கி, பிரம்மமாகிய நீரை அடைகிறான். ஒரு சீட்டில் சர்க்கரை என்று எழுதி வாயில் போட்டால் தித்திப்பு உண்டாகிறதில்லை. சர்க்கரையை வாயில் போட்டாலே தெரியும். வெறும் நூல் ஆராய்ச்சியால் மட்டும் ஒரு பயனையும் அடைய முடியாது. கல்லினுள் நீர் செல்லாது. அதுபோல் ஜிதேந்திரியர்களிடமும் மாயை செல்லாது. இந்திரிய ஜயமில்லாதவர்களிடம் மாயை குடிகொண்டிருக்கும். பஞ்சை நீரில் வைத்தால் நீர் இழுத்துக் கொள்ளுவது போல் இவர்களை இழுத்துவிடும்.

மனமென்ற மத யானையானது கட்டுத்தறியி லிருந்து அறுத்துக் கொண்டு காட்டிலுள்ள மரஞ் செடி கொடிகள் முதலியவற்றை நாசஞ் செய்து கொண்டு தன்னிஷ்டம் போல் திரிகிறது. விவேகம் என்ற அங்குசத்தினால் சிரசில் குத்தியவுடன் யானை அடங்கி விடுகிறது. அதுபோல் விவேகத்தினால் மனதை அடக்கியாள வேண்டும்.

நீ அறிவு வளரும் நூலை முதலில் ஆராய்ச்சி செய். பிறகு அதன்படி நடக்க முயற்சி செய். நீ செய்யும் முயற்சி வெற்றியாகும்வரை, எவ்வித இடர் நேரிடினும் ஊக்கம் குன்றாது, முன்னேறிச் செல் — ''ஊக்கமது கைவிடேல்''. நீ வெற்றி பெற்ற பின் உன் முயற்சியால் நேரிட்ட நன்மை களைப் பிறருக்கு மிக எளிதில் கூற இயலும். அவ்வாறு கூறும்போது அதன் உண்மை வடிவம் உன் முகத்தினின்றும், கேட்கும்போது வாக்கினின்றும், மனதில் ஊடுருவிச் செல்லும். கேட்பவனும் பயன் பெறுவான்.

நீ கற்றதைவிட உன் அனுபவத்தைக் கூறுவது மேல்; சொல்லிச் செய்வதைவிட சொல்லாமல் செய்வது மேல்; கொடுப்பதாகக் கூறுவதைவிட கொடுத்துவிடுவது மேல்; அன்பைப் பெறுதலைவிட அன்பு புரிதலே மேல்; நீ பெறுவதைவிட ஈதலே மேல்; தொண்டு செய்விப்பதைவிடத் தொண்டு செய்வதே மேல். ஆகையால் நற்காரியங்களை நினைத்த மாத்திரத்தில் செய்துவிடு:

''ஒன்றே செய்யவும் வேண்டும், ஒன்றும்
நன்றே செய்யவும் வேண்டும், நன்றும்
இன்றே செய்யவும் வேண்டும், நாளை, நாளை
யென்பது நமனுடைநாளோ நம்முடை
நாளோ நாமறியோம்''.

## 8. மனதை அடக்குதல்

ஜன்ம சாபல்யம் என்பது விலை கொடுத்து வாங்கும் சரக்கில்லை. தன்னுடைய நன்மையைத் தானே முயன்று பெற வேண்டும். பிறர் வழியைத் தான் காட்டுவார்கள். முயற்சியை ஒருவர் செய்து பயனை வேறொருவர் அடைய முடியுமா? ஒருவன் நோய்க்கு மற்றவர் மருந்து உட்கொண்டால் நோய் விலகிவிடுமா? பசியுடையவர் உணவை மற்றவர் உண்டால் இவர் பசி தீர்ந்து விடுமா? நோய் இனத்தில் இப்பசி நோயும், பிறவி நோயும் ஒன்றே. மானிடர்க்கு நோய்கள் மூன்று விதமாகக் காணும்:—
(1) உடல் நோய்-(க்ஷயம், இருமல், காசம் முதலியன)
(2) உள் நோய்—(காமக் குரோதாதிகள் முதலியன)
(3) உயிர் நோய்—இதுவே பிறவி நோய்.

> ''பிறவாமைக்கு வழி மறவாதிருத்தலே
> மறவாதிரு மனமே இது காணும்
> மருந்துனக்கே''

எனக் கூறிய பொன் மொழியை உன்னுங்கள். முதலில் மனமாகிய அறைக்குள்ளே இருக்கும் அழுக்குகளை வெளியேற்றி மனத்தைத் தூய்மை யாக்குங்கள். அழுக்கு நீங்கிய மனமே அமைதி பெறும், ஒருமைப்படும். அப்பொழுதுதான் பேரின்பம் சித்திக்கும்.

இனிது இனிது ஏகாந்தமினிது. எப்பொழுதும் தனிமையாக இருக்கப் பழக வேண்டும். தனிமையே இனிமை தரும். ஆனால் சில சமயங்களில் உன் வைராக்கியத்திற்கு மாறாக மனம் வேலை செய்யும். அப்பொழுது அதன் போக்கிலே விட்டு, அதைத் தட்டிக் கொடுத்துத் திருப்ப வேண்டும். இடக்குச் செய்யும் குதிரையை அதன் போக்கில் விட்டுத்தான் திருப்பவேண்டும். வெருளுகிற குதிரைக்குக் கண்

மூடி போடாவிட்டால் அது நேரான வழியில் போகாது. அதுபோல விவேக, வைராக்கியங்களாகிற கவசங்களை அணிந்து கொள்ளாவிட்டால் மனம் இறைவன்பால் செல்லாது. மனம் இறைவன் பால் செல்ல வேண்டுமானால் உலகப் பற்றுக்கள் நீங்கவேண்டும். உலகப் பற்றுக்கள் உன்னை விட்டு அகல வேண்டுமானால் விவேகம், வைராக்கியம் இரண்டையும் தீவிரமாகக் கையாள வேண்டும். ஆகையால் விவேகம், வைராக்கியங்களாகிற மஞ்சளை உடல் முழுதும் பூசிக்கொண்டு சச்சிதானந்தக் கடலில் மூழ்குவாயாக!

உண்மைப் பாம்பைக் கயிறு என்று கருதிய பில்வமங்களனுக்கும், உண்மைக் கயிற்றைப் பாம்பென்று கலங்கும் பாமரர்களுக்கும் மனம்தான் காரணமாகிறது. உண்மையில் பாம்பையும், கயிற்றையும் பகுத்தறியும் தன்மையுண்டானபோது அழிவில்லாத, உண்மையான ஆத்துமா புலப்படும்; மன விகற்பம் நீங்கும். இருவினைக்கும் காரணம் மனமே. அந்த மனதை அடக்குதலே மஹா யோகமாகும்.

## 9. பகுத்தறிவு

படகிலேறி ஆழமான ஆற்றைக் கடக்கும்போது சிறிது அஜாக்கிரதையாகயிருந்தால் படகு கவிழ்ந்து விடும். மாம்பழத்தை நறுக்கும்போது கத்தியின் மேல் கவனம் இல்லையாகில் கையில் காயம் ஏற்படும். சரியான முறையில் அடுப்பிலுள்ள தீயை உபயோகிக்காவிடில் வீடு முழுதும் எரிந்து சாம்பலாகிவிடும். கடவுளிடம் சரியாக நம்பிக்கையுடன் நடந்து கொள்ளாவிடில் வீண் கஷ்டங்களுக்கு உள்ளாக வேண்டி வரும். நிலத்தை உழாமலும் நல்ல உரம் இட்டு நல்ல விதை விதைக்காமலும்,

காலா காலத்தில் தண்ணீர் பாய்ச்சாமலும் இருந்தால் நல்ல விளைச்சலை எதிர்பார்க்க முடியாது. பூமியிலிருந்து நல்ல பலனைப் பெற வேண்டுமானால் நல்ல விதையை நன்றாய் உழுத நிலத்தில், விதைக்க வேண்டும்; காலா காலத்தில் உரமளித்துத் தண்ணீர் பாய்ச்ச வேண்டும். அதுபோல் மனமென்ற நிலத்தில் வைராக்கியம், விசுவாசம், சத்தியம், பொறுமை முதலாகிய நல்ல உரங்களைப் போட்டு பகவந் நாமமாவாகின்ற விதையை விதைத்து பக்தியென்ற நீரைப் பாய்ச்சி சாதனம் என்னும் மரத்தை வளரச் செய்தால், நீ கடவுளின் அருள் என்ற இனிய கனியைப் பெறுவாய்.

ஆத்துமாவைத் தேரில் வீற்றிருப்பவனாகவும், சரீரத்தைத் தேராகவும், புத்தியை சாரதியாகவும், மனதைக் கடிவாளமாகவும், இந்திரியங்களைக் குதிரைகளாகவும், இந்திரிய விஷயங்களை மார்க்கங்களாகவும் சொல்லுவார்கள். சரீரம், மனம் இந்திரியங்களைப் பெற்ற ஆத்துமாவை சம்சாரியென்று விவேகிகள் கூறுவார்கள். தேரில் கட்டிய குதிரை வசப்படாமல் கடிவாளத்தையும் சாரதியையும் கூடிய தேரை இழுத்துக்கொண்டு செல்லுகிறது. இதற்கு மாறாக சாரதி கடிவாளத்தினால் குதிரையை அடக்கி நடத்தப் பழக வேண்டும். அது கைகூடும் போதுதான் சாரதியின் மேன்மை விளங்கும்.

உனது வாழ்க்கையில் தீமைகள் தான் அதிகமேயன்றி நன்மைகள் அதிகம் இரா. உன் அந்திய காலத்தில் ''நாம் நல்ல காரியாதிகளைச் செய்யாமல் மோசம் போனோமே'' என்று துக்கப்படுவதால் ஆவது என்ன? இந்தப் பிறவியில் நல்ல பருவத்தில் உன் வாழ்விற்குத் தகுந்த மார்க்கங்களை வகுத்துக் கொள்ளாதது உன் பிழையே. பிறகு உன்னால் என்ன செய்ய முடியும்? உன் ஆயுளை நீயே கணக்குப்

பார்க்க இயலாத போது யார் உனக்குத் துணை புரிவார்கள்? உன் மனைவி மக்கள் மாதா பிதா உற்றார் உறவினர் நண்பர் தனம் அதிகாரம் திட சரீரம் இன்பநுகர்ச்சிகள் முதலியன உன் ஆயுளுக்குத் தகுந்த மருந்தாக மாட்டாது. இவை களையெல்லாம் உதறித்தள்ளி விட்டு வெளியேறு.

## 10. பக்தியின் சிறப்பு

குகன் ஸ்ரீ ராமரைப் பார்த்து விண்ணப்பித்துக் கொண்டதாவது:- ''லோகநாதா! யான் தங்களை ஓடத்தில் ஏற்றி அக்கரை கொண்டுவிடப் பிரிய முள்ளவனாக இருக்கிறேன். ஆயினும் ஓர் விக்ஞா பனம். தங்கள் பாத தூளிக்குக் கல்லையும் பெண் ணாக்கும் சக்தி இருக்கிறதென்று கேள்விப்பட்டிருக்கி றேன். ஆதலால் தூளி நிறைந்த தங்கள் பாதத்தை கங்கா ஜலத்தில் கழுவி, சுத்தஞ் செய்து. எனது கைகளால் தூக்கி ஓடத்தில் வைத்துக்கொள்ளு கிறேன். கல்லுக்கும் மரத்துக்கும் அதிக வித்தியாச மில்லை. தங்கள் பாத தூளியினால் நான் ஜீவனம் செய்யும் இவ்வோடமும் பெண்ணாகி விடில் நான் என்ன செய்வேன்? எவ்வாறு என் குடும்பத்தை நடத்துவேன்?'' இவ்வாறு குகன் தாழ்மையுடன் பிரார்த்திக்க பகவான் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி அவனுடைய ஒப்பற்ற பக்தியை அறிந்து அவனுடைய வேண்டுகோளுக்கு இணங்கினார். குகனும் மனம்போல் கங்கா ஜலத்தால் பகவானின் பாதங்களை நன்றாய்க் கழுவி சுத்தம் செய்தான். பிறகு அனைவரும் ஓடமேறி அக்கரை சேர்ந்தனர்.

## 11. உன் கடமை

உனக்கு பிறர் செய்த உதவிக்குப் பதில் உதவி புரிய மறக்க வேண்டாம். அது மிகவும் நன்மை யானது. அவ்வுதவியைப் போல் நீயும் பெரிய உதவியை அவருக்கோ அல்லது வேறு எவருக்கோ

புரிய தவற வேண்டாம். நீ பிறர்க்குப் புரிந்த உதவியையோ, தர்மத்தையோ உடனே மறந்து விடுவதுடன், உனக்கு பிறர் செய்த தீமை, நீ பிறர்க்குச் செய்ய உத்தேசித்திருக்கும் தீமை இவை களையும் உடனே மறந்துவிடு. உன் கஷ்டங்களைக் கண்டு வருந்துவதைவிடப் பிறர் படும் கஷ்டங்களைக் கண்டு வருந்தி அவர்களுக்கு உதவிபுரிந்து உடனே அதை மறந்துவிடு. நீ பிறரிடம் குற்றங்குறைகளைக் கண்டால் வெளியே சொல்லாதே. இந்த ஒழுக்கத் தால் அடையும் பலன் மிகப் பெரிது. கடவுள் எங்கும் நிறைந்து இருக்கிறார். அவரவர் புரியும் நன்மை தீமைகளை அறிந்து அவைகளுக்குத் தகுந்த பலா பலன்களை அவர் அளித்து வருகிறார். நீ அவை களில் புகுந்து நன்மை தீமைகளை ஆராயாதே. உண்மையைக் கண்டுபிடிக்க உன்னால் ஆகாது. நன்மை தீமையைப்போலும், தீமை நன்மையைப் போலும் தோன்றலாம். பசுத்தோல் போர்த்த புலி பசுப்போலும், புலித்தோல் போர்த்த பசு புலி போலும் உனக்குக் காட்சியளிக்கும். நீ ஏமாந்து போவாய். உன் கடமையை மட்டிலும் சரிவரச் செய்து வந்தால் கடவுள் பாக்கி விஷயங்களைக் கவனித்துக்கொள்வார். "எல்லாம் அவனே," என்ற மனோபாவத்துடன் இருக்கப் பழகி வந்தால் சாந்தி நிலை தானாகவே உன்னை வந்தடையும். சாந்தி பெற்றவருக்குப் பேரின்ப நிலையும் தானாகவே வந்து எய்தும்.

மன நோய்க்குக் குருவும் அவர் உபதேசமும் தேவை. சரீர நோய்க்கு வைத்தியனும் அவன் மருந்தும் தேவை. வைத்தியர் கூறியபடி மருந்து சாப்பிட்டு வந்தால் சரீர நோய் குணமடைந்து இன்புற்று வாழலாம். குரு உபதேசித்தபடி தவறாமல் நடந்து வந்தால் மனநோய் அற்றுப் பிறவி நோய் அற்றுப் பேரின்ப வீட்டை அடையலாம்.

## 12. காமிய, நிஷ்காமிய கர்மம்

''நான் எவ்வளவு தர்மங்கள் செய்திருக்கிறேன், இன்னும் செய்யப் போகிறேன்; யாராலும் நான் செய்வது போலச் செய்ய இயலாது; எந்த தர்ம ஸ்தாபனங்களிலும் எனது பெயர் இல்லாமலிருப்ப தில்லை'', எனச் சிலர் பெருமை சொல்லிக் கொள்வர்.. இவைகளெல்லாம் உலகில் புகழ் பெற, ஆடம்பரமாகச் செய்வதேயல்லாமல் உள்ளன்புடன் புரியும் தர்மமன்று. பல நிறக் காகிதப் பூக்கள் பார்க்க அழகாயிருந்தாலும் அவைகளில் மண மிராது. ஆனால் இயற்கை மலர் தானாக மணம் வீசும். அதுபோல ஆடம்பரப் பகட்டுகளில் அருள் மணம் வீசாது.

அகங்காரமற்று, உயர்ந்த பற்பல தர்மங்கள் செய்பவரிடம் யாராகிலும் சென்று, ''ஐயா! தரும வானே! புண்ணிய சொரூபமே! தாங்கள் புரியும் தர்மம் எங்கும் பரவி யாவரும் தங்களைப் புகழ் கின்றார்கள்,'' என்றால், அவர், ''நான் என்ன தர்மம் செய்தேன்? எனக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? எதிலும் நான் நிமித்த மாத்திரமே; இந்தச் சரீரம் அதன் கடமைகளைச் செய்து வருகின் றது; மனிதன் சுதந்திரமற்ற ஓர் இயந்திரக் கருவி தானே; இறைவன் இயந்திரத்தைத் தன் இச்சைப் படியே இயக்குகிறார்; அவனன்றி ஓர் அணுவும் அசையாது,'' என்று அன்பொழுக அடக்கமாக வணக்கமுடன் புகல்வார்.

புழு, ஈ, வண்டு இந்த மூன்று இனங்களில் வண்டை ஒத்துவாழ்.

1. கேவலம் உலகப் பற்றிலேயே உழல்பவன் மலத்திற் பிறந்து இறக்கும் புழுவுக்கு ஒப்பாவான்.

2. உலக இன்பங்களேயும், பக்தி சாதனங்களே யும் புரிந்து வருபவர், மலத்தின் மீதும், மலர்களின் மீதும், மதுர பதார்த்தங்களின் மீதும் இருக்கும் ஈக்கு ஒப்பாவார்கள்.

3. உலக இன்பங்களே மலம் போல் ஒதுக்கித் தள்ளி வெறுப்படைந்து, பேரின்ப மடைவோர் தேனேத்தவிர, வேறு எதையும் அணுகாத வண்டை ஒத்தவராவர்.

## 13. அறிவினுல் ஏற்படும் ஆத்ம ஞானம்

மலேகளிலும், குகைகளிலும், வனங்களிலும் மிருகங்கள் வாழ்கின்றன. நீரில் மீன்கள் வாழ் கின்றன. காய்கனிகளேயே பட்சிகள் புசித்து மரங்களில் கூடு கட்டி வாழ்கின்றன. காற்றையே உணவாகக் கொண்டு பாம்புகள் புற்றுகளிலேயே வாழ்கின்றன. ஆடு, மாடுகள் புல் பூண்டுகளேயே புசித்து வருகின்றன. வண்டினங்கள் மலர் களிலுள்ள மதுவையே உணவாகக் கொள்ளு கின்றன. கல்லினுட் தேரைகள் வாழ்கின்றன. இவைகள் எல்லாம் ஏன் யோகி ஆகாமலிருக் கின்றன? பகுத்தறிவு, ஆத்தும ஞானம் இவை களால்தான் யோகியாகவோ, ஞானியாகவோ முடியும்.

புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்தல், நெற்றியில் விபூதி-சந்தன-குங்கும மணிதல், கழுத்தில் உருத்திராக்ஷம் அணிதல், ஜெபமாலே உருட்டல், இவைகளேப் பிறர் மெச்சும் பொருட்டுச் செய்யாதே. பிறரை மயக்கி வயிறு பிழைக்க வேஷம் போடாதே. நீ நற்கதியடையத் தடையா யிருப்பவர்களே விட்டு விலகு. உள்ளத்திலுள்ள தீய

திருடர்களை ஒழி. இவர்கள்தான் உனது உண்மை யான எதிரிகள். இவர்களைப் பூண்டோடு ஒழிப்பா யாகில் ஆத்ம சாந்தியை நிச்சயம் பெறுவாய்.

உஷாராகக் காவல் புரியும் வீட்டில் திருடர்கள் நுழைய முடியாது. எனினும், எப்பொழுதும், உன் வீட்டில் திருடர்கள் நுழையச் சமயம் பார்த்து வருகிறார்கள்.

''காமக்குரோதஸ்ச லோபஸ்ச தேஹே
திஷ்டந்தி தஸ்கரா:
ஞானரத்னாபஹாராய தஸ்மாத் ஜாக்ரத
ஜாக்ரத:''

(உன்னிடமிருக்கும் ஞான இரத்தினத்தைக் காமக் குரோதர்களாகிய திருடர்கள் அபகரிக்க வந்திருக்கிறார்கள். கவனமாயிரு; விழித்திரு.
— சங்கரர்)

உலக ஆசாபாசங்களாகிற சுமையை மனிதன் எப்பொழுது கீழே எறிகிறானோ, அப்பொழுதே அவன் உலக வியவகாரத்தினின்றும் வெளியேறியவ னாகிறான், பந்தமற்றவனாகிறான். எப்பொழுதும், எதிலும், அவன் சாந்தியே பெறுவான்.

## 14. தாழ்மையும், மேன்மையும்

ஒருவன் தன் வாழ்க்கையின் முற் பகுதியில் பல அநியாயங்களையும், அதர்மங்களையும் செய்வான். காம இச்சையில் ஈடுபட்டுப் பாப — புண்ணியம் பாராது மனம் போனபடியே சென்று கொண்டிருப் பான். பூர்வ புண்ணிய வசத்தால் நல்ல காலம் வரும்போது, தான் முன் செய்த தீவினைகளைக் குறித்துத் துயரமடைந்து இறைவனைச் சரண்புகு வான். இவன் தன்னை உணர்ந்து, பக்திப்

பரவசஞகி, ஆத்தும ஞானத்தை அடையுங்கால், இவன் புரிந்த பாபச் செயல்களும் நசித்துவிடும். மகாத்மாவாகிய துளசிதாஸர், பில்வமங்கள், அருணகிரி நாதர் போன்றவர்கள் பிரம்மஞானம் பெற்று, உலகிற்கு வழிகாட்டினர்.

தியான யோகப் பயிற்சியாலும், ஆத்தும விசாரத்தாலும், பாடுபடாமல், ''குரு சேவையே,'' செய்து ஈடேறினவர் பலர். குருவின் ஆக்ஞையின் படி, சத்யகாமன் மாடுகள் ஆயிரமாயிரமாக வளரும் வரை அவைகளை மேய்த்துக்கொண்டிருந்ததைத் தவிர வேமுென்றையும் சிந்தியாமலிருந்தான். பக்தி, சிரத்தையால் அவனுக்கு பிரம்ம ஞானம் உதித்தது. குரு அவனைப் பார்த்து, ''நீ பிரம்மஞானியாய் விளங்குவதற்கு யார் உனக்கு குருவாயிருந்து உபதேசித்தார்?'', என்று கேட்டார். ''குருபக்தி'' தான் என்ருன் சத்யகாமன்.

## 15. குருவின் பரீக்ஷை

குருவிடம் ஒருவன் வந்து தனக்குக் கடவுள் தரிசனம் கிடைக்க அருள் புரியும்படி பிரார்த்தித்தான். குரு அவனை ஒரு நாள் நதிக்கு அழைத்துச் சென்று, நீரில் இறங்கிக்கொண்டு, அவனையும் தன்னருகேயழைத்து, அவன் தலையைப் பிடித்துத் தண்ணீரில் அமுக்கி சில நேரம் வைத்துப் பிறகு கையை எடுத்தார். அவன் தலையை மேலே எடுத்த பிறகு அவனிடம், ''நீ தண்ணீருக்குள் இருந்த பொழுது உனது நினைப்பெல்லாம் எதனிடமிருந்தது'' என்று வினவினுர். நான் மூச்சுத் திணறித் தத்தளித்துக்கொண்டிருந்தேன்; எனது நினைப்பெல்லாம் உயிரினிடத்தே சென்றிருந்தது,'' என்ருன். ''அதே மாதிரி உன்னுடைய நினைப்பை

எப்பொழுதும் கடவுளிடம் வைத்து ஆர்வமுடன் வேண்டினுல் கடவுளும் உனக்குக் காட்சியளிப்பார்,'' என்றுர் குரு.

மற்றொரு நாள், வேறு ஒருவன் குருவிடம் வந்து ''சுவாமீ! நான் வைராக்கிய சீலன்; எல்லாப் பந்தங் களையும், மூவாசைகளையும் அறவே ஒழித்து விட்டேன்; எனக்கு உபதேசமளிக்க வேண்டும்,'' என்று வேண்டினுன்.

குரு:— நீ சம்சாரப் பற்று, உலகப் பற்று, இவைகளை அறவே ஒழித்துவிட்டாயா ?

வந்தவன்:— ஆம். அறவே ஒழித்துவிட்டேன்.

குரு:— நீ இந்த மரத்தின் உச்சியில் ஏறுவாயா?

வந்தவன்:— ஏறுகிறேன்.

குரு:— ஆனுல் மேல் கொப்புவரை ஏறிச் செல்லவேண்டும்.

(அவ்வாறே. வந்தவன் மிகவும் அலக்ஷியமாய் மரத்தில் ஏறி உச்சியில் சென்றுன்.)

குரு:— இன்னும் மேலே ஏறு.

வந்தவன்:— இதற்குமேல் ஏற இடமில்லை.

குரு:— நீ ஏறியிருக்கும் மரத்தின் கிளையை மட்டிலும் கையால் பிடித்துக்கொண்டு காலை எடுத்து விடு.

(வந்தவன் சிறிது பயத்துடன் அவ்வாறே செய்தான்)

குரு — இப்பொழுது நீ பிடித்திருக்கும் கொப்பையும் விட்டு விடு

வந்தவன்:— இக்கொப்பை விட்டால் நான் கீழே விழுந்துவிடுவேன்.

குரு:— இப்பொழுது நீ அக்கிளையைப் பிடித் திருக்கிருயா? அல்லது உன்னை அக்கிளை பிடித்திருக் கிறதா ?

வந்தவன் :— நான் தான் அக்கிளையைப் பிடித்துக்கொண்டிருக்கிறேன்.

குரு:— சரி, கீழே இறங்கு.

(வந்தவன் கீழே இறங்கி வந்தான்).

குரு:— நீ எப்படி கிளையைப் பிடித்திருந்தாயோ அதுபோல், சம்சாரக் கிளையையும் நீ பிடித்துக் கொண்டிருக்கிறுய். ஆதலால் இன்னும் பக்குவ மடையவில்லை. பக்குவமடைந்தோன் சரீராபி மானத்தைக் கருதான்.

[இவ்வாறு கூறி குரு அவனை அனுப்பிவிட்டார்.]

## 16. மந்திரோபதேசம்

''மந்திரம்'' என்பது சர்வ சாதாரணமாய் யாவரும் அறிந்ததே. இதைப் பிரசங்க மூலமாய்ப் பலர் உபதேசிக்கிறுர்கள். ஆனுல், சாஸ்திரப் பிரகாரம், குரு இரகசியமாய் சீடனுடைய வலது செவியில் மூன்று தரம் ஓத வேண்டும். இவ்வாறு அவர் உபதேசம் செய்யும்போது சீடன் ஐம்புலன் களையும் அடக்கி அவரிடமும் அம்மந்திரத்தினிடமும் பூரண பக்தி — விசுவாசம் — சிரத்தை வைத்து அதை கிரகிக்க வேண்டும். பின் அதை அனுஷ்டிக்க வேண்டும். இத்துடன் உடல், பொருள், ஆவி, மூன்றையும் குருவின் பாதத்திற்கு அர்ப்பணிக்க வேண்டும். இவ்வாறு பக்தி, சிரத்தையுடன் அம்மந்திரத்தை உச்சரிப்பவன் குருவின் நிழலுடன் கலந்தவனுகிறுன். அவனை இரக்ஷிக்கவே இறைவன் ஸத்குரு உருவாகத் தோன்றுகிறுன்.

ஒருவன், தன் வாழ்நாள் முழுவதும் தேடியும் ஸத்குரு கிடைப்பதில்லை. காரணம், இன்னும் அவன் பிறவி நோய் தீர்ந்து பரமபதம் சேருவதற் குரிய பக்குவ நிலையடையவில்லை என்பதே. பக்குவி

ஒரு முயற்சியும் இல்லாமலே குரு தரிசனமும் உபதேசமும் பெறுகிறான். குருவின்றிப் பரமபதமடைய விரும்புவது, மாலுமியில்லா மரக்கலத்தில் கடற் பிரயாணம் செய்வது போலாகும். குரு மூலம் உபதேசமடைந்தால் இறைவனை எளிதில் அடைய இயலும். பிரகலாதன், துருவன் இவர்களுக்கு நாரதர் உபதேசித்தார்.

பண்டரிநாதனிடம் நேரில் பேசி மகன்போல் அன்பு செய்த நாமதேவரை, அறிஞர் சபையில் கோராகும்பர் சுடாச் சட்டி (குரு உபதேசமாகாதவர்) என்றார். நாமதேவர் மனம் தாளாமல் தன் ஞான பிதாவாகிய ஸ்ரீ பண்டரிநாதனிடம் சென்று, சபையில் நடந்தவைகளை முறையிட்டார். புன்முறுவலுடன் கேட்ட எம்பெருமான், "எனது அருமைக் குழந்தாய்! அவர்கள் செய்தது முற்றிலும் நியாயமே; நீ ஒரு குருவினிடமிருந்து உபதேசம் பெற்ற பிறகுதான் உன் பக்தி, ஞானம் பூரணமாகும்; ஆகையால் வீசோப கேசரிடம் சென்று உபதேசம் பெற்றுக்கொள்," எனத் திருவாய் மலர்ந்தருளினார். அவ்வாறே உபதேசம் பெற்று நாமதேவர் பரம பாகவதரானார். அத்துவித சாட்சாத்கார மேற்பட வேண்டுமானால், குரு கிருபை வேண்டும்; அவரே ஜீவ-பிரம்ம-ஐக்கியத்தை அனுபவமாகும்படி உபதேசிக்க முடியும்.

அருளில்லாதவர் உபதேசம் ஏறாது. பக்குவமில்லாதவனுக்கும் உபதேசம் புத்தியில் ஏறாது. ஸத்குருவின்றி அறிவு மலராது; அனுபவம் வராது. குரு உபதேசமே நன் மாணவனைப் பக்குவப்படுத்திப் பரமகதியளிக்கும்.

## 17. ஆத்தும உணவு

மனிதன் உண்ணும் உணவு உடலை வளர்க்கிறது. கடவுள் சிந்தனையெனும் உணவு ஆத்துமாவை

வளர்க்கிறது. மனிதன் மாயா சக்தியால் சரீரத்திற்கு வேண்டிய அறுசுவை உண்டியைத் தவருமல் உண்கிருன். ஆத்தும உணவை மறந்துவிடுகிருன். வயிற்றுப் பாட்டுக்காக இராப்பகலாய் அலைந்து வருந்திப் பொருள் சேர்த்து அதனுல் நல்ல உணவையே அனுபவிக்கிருன். ஆனுல் ஆத்துமாவுக்குள்ள உணவு உள்ளேயுள்ளது. எங்கும் அலைய வேண்டியதில்லை. பொருட்செலவு சிறிதும் கிடையாது.

தேக சுத்தி நீரினுலும், மனே சுத்தி வாய்மையினுலும், ஆத்தும சுத்தி தியானத்தாலும், புத்தி சுத்தி ஞானத்தினுலும் உண்டாகும். கருமத்தாலும், புதல்வரைப் பெறுவதாலும், செல்வத்தாலும், அமரத்தன்மையைப் பெற முடியாது. அழியாத் தன்மையை தியாகம் ஒன்றினுலேதான் அடையமுடியும்.

யோகம் நான்கு வகையாகும். உணர்ச்சி மிக்குடையோருக்கு பக்தியோகமும், மனே வலிமை உள்ளவர்களுக்கு ராஜயோகமும், அறிவின் முதிற்சி உடையோருக்கு ஞானயோகமும், கருமத்தில் கண்ணுயிருந்து வருபவர்களுக்குக் கருமயோகமும் பொருந்தும். ''பக்தர்கள் பகவானென்றும், வேதாந்திகள் பிரம்மனென்றும் கூறுகிருர்கள். ''யாவும் நீயே; நான் தாஸன்; நீ எஜமான்,'' என்னும் பக்தி நிலை எப்பொழுது பக்குவமாகிறதோ அப்பொழுதுதான் கடவுளை அடைய முடியும்.

## 18. எல்லாம் ஆத்தும சொரூபம்

பரமாத்மா எல்லா ஜீவர்களிடத்திலும் இருக்கிருர். அவரிடம் பட்சாதாபமில்லை. அவர் எல்லா ஜீவன்களுக்கும் தகுந்த பெருமையை அளித்திருக்கிருர். கூர்மையான பார்வையைப் பெற்ற கழுகுகளும்; செவித் திறமை பெற்ற நாய்களும்

மோப்பத் திறன் பெற்ற எறும்புகளும், நாக்கின் பெருமை பெற்றுப் பாலேயும் நீரையும் பிரிக்கும் அன்னமும் காலறிவு பெற்ற சிலந்தியும், ஸ்பர்ச சக்தி பெற்ற குருடரும், தங்கள் தங்களுக் கேற்ற திறமையைப் பெற்றிருக்கிறார்கள். நமது சக்திகளை நாம் அடிக்கடி பயன்படுத்தாததால் அவைகள் மறைந்து போகின்றன. தவசக்தியால் புலன்கள் மாசற்றுப் புலமை வெளிப்படுகிறது. புலமை எங்கிருந்தும் வருவதில்லை; பிறரிடமிருந்து இரவல் வாங்குவதுமில்லை. மனிதனாகப் பிறந்தவன் உயர்ந்த பரம்பொருளைக் கண்டறிவதிலேயே குறிப்பாயிருத்தல் வேண்டும். அதற்கேற்றபடி புலமை விளங்கும்.

## 19. மகா புருஷர்களின் சக்தி

பகவானைச் சாட்சாத்காரம் செய்த பிறகு ஒரு நாள் நாரதருக்கு ஒரு எறும்பின்மீது கருணையுண்டானது. அவர் தமக்குள்ளே, "நான் பல மனிதப் பிறவிகளில் செய்த தவப்பயனாக இப்பொழுது பரிபூரணம் அடைந்தேன்; இந்த எறும்புக்கோ மனிதனாகப் பிறப்பதற்கு நீண்டகாலம் காத்திருக்க வேண்டும்" எனக் கூறியவராய் மிகுந்த தயவுடன் அவ்வெறும்பை நோக்கி, "நீ முக்தனாகுக," என ஆசீர்வதித்தார். அக்கணமே அந்த எறும்பும், பறவைகள், மிருகங்கள் முதலான பிறவிகளை எடுத்து முடிவில் மனித உடலையும் பெற்றுப் பல மனிதப் பிறவிகளையும் அடைந்து, படிப்படியாக அதனுடைய கவனத்தைச் சாதனையில் ஈடுபடச் செய்து பகவானை ஆராதித்து, முக்தியும் பெற்றது. எண்ணற்ற பிறவியையுடைய இச்சம்பவத்தை நாரதர் இமைப் பொழுதிற் கண்டார். ஆகையால் மகா புருஷர் கருணை வைத்தால் ஒருவன் மறுகணமே முக்தியை அடையக்கூடும்—"இச்சா மாத்ரம் பிரபோஸ்ருஷ்டி"

---

# சுவாமி சிவானந்தர் தமிழ் நூல்கள்

| நூல் | விலை ரூ. |
|---|---|
| இந்து தர்மம் | 12-00 |
| வாழ்விலும் ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் .... | 12-00 |
| ஸமாதி யோகம் .... | 12-00 |
| நீதிநெறிக் கதைகள் .... | 7-00 |
| இமயமலையின் வீரமுழக்கம் .... | 7-00 |
| சுவாமி சிவானந்தரின் சுயசரிதை .... | 6-00 |
| ஞானயோகம் .... | 6-00 |
| தர்ம உபதேசம் .... | 5-00 |
| சிவானந்தரின் சத்சங்க உபதேசங்கள் .... | 5-00 |
| யோகவாசிஷ்டக் கதைகள் .... | 5-00 |
| மாணவர்கள் வாழ்வில் வெற்றி .... | 4-00 |
| தினசரி வாழ்வில் யோகம் .... | 4-00 |
| கர்ம யோகம் .... | 4-00 |
| நன்னெறிக் கதைகள் .... | 4-00 |
| சாதன சதுஷ்டயம் .... | 4-00 |
| அன்பு, அஹிம்சை, தூய்மை .... | 4-00 |
| வாழ்க்கையின் லக்ஷியம் .... | 3-00 |
| சத்சங்கமும் ஸ்வாத்யாயமும் .... | 3-00 |
| சங்கீர்த்தன யோகம் .... | 3-00 |
| பெண்மணிகளுக்குப் பொன் மொழிகள் .... | 3-00 |
| குரு தத்துவம் .... | 3-00 |
| ஞான தீபம் .... | 3-00 |
| ஒளி சக்தி ஞானம் .... | 3-00 |
| உபதேச மஞ்சரி .... | 2-00 |
| சிவானந்த வாணி .... | 2-00 |
| சிவானந்தர் மொழியமுதம் .... | 2-00 |
| உருவ வழிபாடு ... | 2-00 |
| தெய்வீக வாழ்க்கை (சுவாமி சிதானந்தா) .... | 5-00 |
| இராஜயோகச் சொற்பொழிவுகள் ,, .... | 5-00 |
| ஞானஒளிபெற நல்வழிகாட்டி ,, .... | 4-00 |
| சிறிய வாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டி ,, .... | 3-00 |
| சிதானந்தரின் அருட் செய்தி ,, .... | 3-00 |
| சிதானந்தரின் சத்சங்க உபதேசங்கள் ,, .... | 2-00 |
| நித்திய நெறிகள் ,, .... | 2-00 |
| மனித வாழ்க்கையின் குறிக்கோள் ,, .... | 1-00 |
| சர்வரோக நிவாரணி (சுவாமி பூமானந்தா) | 3-00 |



